# டாடாவிஷன்



டாடாவின் பெருநோக்கு. தீர்க்க தரிசனமுள்ள கருத்துக்கள் இருந்து என்ன? அவை மக்களிடையே பரவாவிட்டால் என்ன பயன்?— அவை மக்களைத் துறுதுறு என்று செயல்படுத்த வேண்டாமா?

ஜாம்ஷெட்பூரில் நல்ல கருத்துக்கள் செயலாகாமல் வீணாவதில்லை. ஏற்ற உதவிகளும் சூழ்நிலையும் அங்கே உள்ளன. இத்தகைய ஒன்றே குடும்ப நலத்திட்டம்.

இந்தத் திட்டம் ஜாம்ஷெட்பூரில் தொடங்கிய மூன்று ஆண்டுகளுக்குள் 'விவாத-வட்டங்களில்' கலந்து கொள்வோர் தொகை பத்து மடங்காக உயர்ந்து விட்டது. விவாதத்தின் விளைவாக எழுந்த தெளிவான உறுதி: 1965-இல் ஜாம்ஷெட்பூரில் பிறப்புவிகிதம் குறையத் தொடங்கி விட்டது.

**டாடா எஃகு ஸ்தாபனத்தின் குடும்ப நலத் திட்டத்தினால் ஜாம்ஷெட்பூர் மக்களுக்கு என்ன பயன்?**

இரண்டு நவீன நகரத்துக் குடும்பத் திட்ட நிலையங்களும் ஆறு பிரசவ, குழந்தை பராமரிப்பு விடுதிகளும் இனாமாகக் குடும்பக் கட்டுப்பாட்டு சாதனங்களை வழங்குகின்றன; ஆலோசனை கூறுகின்றன.

இரண்டு நகர நிலையங்களிலும் டாடா மெயின் ஆஸ்பத்திரியிலும் 'வாஸக்டமி' ஆபரேஷன் செய்யப்படுகிறது. அதைச் செய்து கொள்ளும் கம்பெனி ஊழியருக்கு ஆபரேஷன் செலவு இல்லை. அதோடு ரொக்கப் பரிசாக ரூ. 200/- தரப்படுகிறது. போனவருஷம் ஆகஸ்டு டிசம்பர் காலத்தில் 1650 பேர் ஆபரேஷன் செய்து கொண்டதில் வியப்பில்லை. கம்பெனி ஊழியரின் மனைவியர் 'டியூபெக்டமி' ஆபரேஷன் செய்து கொண்டாலோ, 'லூப்' பொருத்திக் கொண்டாலோ ஊக்கப்படுத்தும் வகையில் ரொக்கம் வழங்கப்படுகிறது.

**டாடா ஸ்டீல்**

# கல்கி



## பொருளடக்கம்

கீலக வருஷம், மாசி 5உ 1969 பிப்ரவரி 16உ







**உஷா - நாகராஜ்**

அசோகா சுகந்த பாக்குத் தூள் தயாரிப்பாளர் கோயமுத்தூர் ஸ்ரீ எம். கே. கிருஷ்ண செட்டி அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி உஷாவுக்கும், சென்னை ஸ்ரீ C. Y. ஆஞ்சநேயலு செட்டி அவர்கள் குமாரர் சிரஞ்சீவி நாகராஜுக்கும் சமீபத்தில் கோவையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும், உறவினர்களும், நகரப் பிரமுகர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர். வாழ்க மணமக்கள்!



திரு அண்ணாதுரைக்குப் பிறகு, தி. மு. க. சட்டசபையாளர்களின் தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள திரு மு. கருணாநிதிக்கு என் மனமார்ந்த நல்வாழ்த்துக்கள். அவருக்கு ஏற்பட்டுள்ள பொறுப்புக் களை ஆற்றுவதில் பூரண வெற்றி பெறுவாராக. ராஜ்யத்தைத் திறமை யுடனும், நேர்மையுடனும், நீதியுடனும் நிர்வகிப்பதே அவரது முக்கியமான கருத்தாக இருக்கவேண்டும். அவரது கட்சியின் பலத்தை உயர்த்தவும் இதுவே வழியாகும். முதன் மந்திரியாகப் பதவிப் பிரமாணம் ஏற்றுவிட்ட பின் கட்சி பற்றிய கருத்தின்றி மக்களின் எல்லாப் பிரிவினருக்கும் பணி புரிவது அவர் கடமையாகும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 28 □ இதழ் 29

# லாட்டரி: தில்லியின் பொறுப்பு

ஒரு ராஜ்யத்தை அடுத்து மற்றொன்றாகத் தேசமெங்கிலும் சர்க்கார் லாட்டரி பரவி வருகிறது. இதனால் அது நியாயமாகி விடாது. இத் தீமை விரைவிலேயே நாடெங்கும் பரவும் என நான் பயந்தது உறுதிப்பட்டு விட்டது. வியாதிகள் விரைவாகவே பரவும்.

லாட்டரி என்கிற யோசனையற்ற திட்டத்தின் மூல காரணம், நிதி விஷயத்தில் மத்திய சர்க்கார் நாட்டின் சாரத்தையெல்லாம் உறிஞ்சிக்கொண்டு விடுவதுதான். இதனாலேயே ராஜ்ய சர்க்கார்கள் வருமானத்துக்காக வேறு பல இனங்களை எண்ண வேண்டியதாகிறது. இவ்விஷயமாக ராஜ்யங்கள் கிளர்ச்சி செய்வது உசிதமாயிருக்கும். தமது ' வருமானத்துக்காக மக்களுக்கு லாட்டரிச் சபலம் காட்டுவது முறையல்ல. மக்கள் எளிதில் சூதாட்டத்துக்கு வசமாவது நீண்ட கால உண்மை. இதைச் சார்ந்து, சர்க்கார் வருமானத்தைப் பெருக்க எண்ணுவது புதுமை; எவ்வளவு புதுமையோ, அவ்வளவு அவமானகரமானதும் ஆகும். இவ்விஷயமாக என் வேண்டுகோள்கள் சர்க்காரின் புனராலோசனையைத் தூண்டிவிடவில்லை என்று காண்கிறேன்.

ஜனவரி 2-ந் தேதி திரு அண்ணாதுரைக்கு இவ்விஷயமாக எழுதினேன்:

''துரதிருஷ்டவசமாக லாட்டரித் திட்டம் தமிழ் நாட்டையே ஒரு பெரிய சூதாட்டக் கூடமாக்கி விட்டது. சூதாட்ட உணர்வு என்கிற தொத்துநோய்க் கிருமி மக்களை எல்லாம் பற்றிக்கொண்டு விட்டது. உழைப்பு மனப்பான்மை பெறவேண்டிய மக்கள் அனைவரும் லாட்டரி மனப்பான்மை பெற்று விட்டனர். இத்திட்டம் மக்களின் பேராதரவைப் பெற்று வெகு வேகமாக முன்னேறி வருவது, இதனால் விரைவில் ஏற்படக்கூடிய தார்மிகச் சிதைவு பற்றி நான் பயந்ததை உறுதிப்படுத்துகிறது.

தீமை எளிதில் பரவும், சீக்கிரத்தில் பரவும். மிகப் பெரும் பரிசுகளைச் சபலமாகக் காட்டியும், வெற்றி பெற்ற அதிருஷ்டசாலிகளைப் பற்றிப் பத்திரிகைகள் மகத்தான விளம்பரம் செய்வதன் மூலமும் ஏழை மக்களின் பணத்தைப் பெறுகிற சென்னை சர்க்கார் லாட்டரித் திட்டம், பொதுவாக மக்களின் மனோபாவத்தை நாசமாக்கி விட்டது.

நல்ல காரியங்களுக்கு நிதி தேவைப்படுகிறது என்பதால், பெரிய எதிர் விளைவுகளை உண்டாக்கும் இந்தத் தவறான திட்டம் நியாயமாகி விடாது. கள், சாராயக் கடைகளைத் தமிழ் நாட்டில் மீண்டும் திறக்கக்கூடாது என்பதில் நீங்கள் எத்தனையோ பெரும் நெரிசலுக்கிடையிலும் உறுதியாக நின்றதை எவ்வளவு பாராட்டினாலும் தகும். ஆனால் இந்தப் பெரும் சூதாட்ட விடுதியைத் திறந்து வைத்திருப்பது, மதுப் பிரச்னையில் அடைந்த நன்மையை அற்றுப் போகச் செய்து விடுகிறது.

என்னைப் போலவே சர்க்கார் லாட்டரிகளை வெகுவாக ஆட்சேபிப்பவர் ஸ்ரீ மொரார்ஜி தேசாய். மக்கள் கருத்து இதற்கு வலுவான எதிர்ப்பாக உருவாகி, தீமை நிறுத்தப்படும் என்று அவர் நம்புகிறார். இந்த நம்பிக்கையின் அஸ்திவாரம் மிகவும் பலவீனமானது என அஞ்சுகிறேன். லாட்டரியால் தார்மிகமாகவும் பௌதிகமாகவும் உண்டாகும் விளைவுகளை அறிஞருலகம் உணர்வதைவிட வேகமாகச் சூதாட்ட வியாதி பரவி வருகிறது. யூனியன் சர்க்கார் உகந்த முறையில் செயலாற்றவில்லை. எல்லா ராஜ்ய சர்க்கார்களும் இத்தீமைக்கு ஆளாகி விட வேண்டியதுதான்.

லாட்டரித் திட்டத்தின் தீய விளைவுகளை யூனியன் சர்க்கார் உணராமலில்லை. ஆயினும் லாட்டரி ஊற்றை அடைத்துவிட்டால், ராஜ்ய சர்க்கார்கள் நிதி உதவிக்காகத் தில்லிக்கே கோரிக்கை விடுப்பார்கள் என்பதைக் கண்டு, அதற்கு முகம்



## சென்னையில் சிருங்கேரி சுவாமிகள்

ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடாதிபதிகளான ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள் சென்னை மாநகருக்கு வருகை புரிந்திருக்கிறார்கள். ராஜா அண்ணாமலை புரத்திலுள்ள ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு சநாதன தர்ம வித்யா சபையின் ஆதரவில் ஸ்ரீ சாரதா, ஸ்ரீ கணபதி, ஸ்ரீ ஆதி சங்கரர் விக்கிரகப் பிரதிஷ்டையும் கும்பாபிஷேகமும் நடத்தி வைப்பதற்காக விஜயம் செய்துள்ள ஸ்ரீ சிருங்கேரி சுவாமிகள் சிவராத்திரிக்கும் சென்னையிலேயே இருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

சுவாமிகளை வணங்கி வரவேற்கிறோம்.

கொடுக்க விரும்பாததாலேயே யூனியன் அரசாங்கம் தலையிடத் தயங்குகிறது போலும்.

நெறியைச் சிதைக்கும் இத்திட்டத்தின் நிச்சயமானவிளைவுகளை நான் காண்கிறேன். எனவே, இந்த லாட்டரித் திட்டத்தை நீங்கள் கைவிடுமாறு செய்வதில் நான் வெற்றி காணவிடில், வேறென்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி நான் எண்ணியாக வேண்டும். இவ்விஷயத்தில் நான் எவ்வளவு வருத்தம் அடைந்திருக்கிறேன் என்பதை நீங்கள் உணர முடியும். தயவு செய்து இதற்கு உங்களது மனப்பூர்வமான கவனத்தைத் தரவும்.

அப்போது தமிழக முதன் மந்திரி சுகவீனம் அடைந்தார். அவரது உடல்நிலை மிக மோசமாயிற்று. எனவே இந்தக் காலகட்டத்தில் அவரது சகாக்களும் இவ்விஷயமாக எதுவும் செய்திருக்க முடியும் என எதிர்பார்ப்பதற்கில்லை.

தமிழகத்தின் புதிய மந்திரி சபையும், மற்ற ராஜ்ய மந்திரி சபைகளும் என் கருத்து தவறானது என எண்ணலாம். சர்க்கார் ஆதரவில் ராஜ்யம் முழுவதையும் சூதாட்ட விடுதியாக்கிச் சுலபமாகப் பணம் சேர்ப்பதைக் கைவிடுவதற்கில்லை என்றெண்ணலாம். இதற்குப் பதில் பத்துப் பன்னிரண்டு கொள்ளைக்காரர்களுக்கு லைசென்ஸ் தந்து அவர்களைப் பணக்காரர்களின் வீடுகளில் கொள்ளையிட உத்தரவு போட்டு, கொள்ளையில் சர்க்காரும் பங்கு பெறலாம். பணக்காரர்களைக் கொள்ளை இடுவதால், இதற்கு ஒரு 'சோஷலிஸ' ரூபமாவது இருக்கும். ஒரு ரூபாய் செலவிட்டு லட்சாதிபதியாகின்ற அதிர்ஷ்டசாலிகளைக் காட்டி ஏழைகளைச் சபலத்துக்கு ஆளாக்குவதைவிட இது நல்ல வழி.

இதற்கெல்லாம் மூலமான பாபம் மத்திய சர்க்காரின் தலையிலேயே சாரும். வரவையும் செலவையும் ஈடு கட்டுவதற்காக இப்படிப் பட்டதோர் அகௌரவமான முறையை ராஜ்யங்கள் நாடுமாறு செய்திருப்பது மத்திய சர்க்காரே. லட்சம் ரூபாய் பரிசு பெற்ற ஏழைகளைப் பிரபலப்படுத்துகிறார்கள். ஆனால் இந்த லட்சக்கணக்கான ரூபாய்கள் எங்கிருந்து வந்தன? சொர்க்கத்திலிருந்து அல்ல; சர்க்காரிடமிருந்து அல்ல; சபலம் காட்டப் பட்ட ஏழை மக்களிடமிருந்தே இத் தொகைகள் வந்தன. அப்பாவிகளான லட்சக் கணக்கான ஏழைகளின் பணம், வெற்றி பெறுவோருக்கும் ஏஜண்டுகளுக்கும் போகிறது. பெரும் பகுதி சர்க்காருக்குப் போகிறது. இது சோஷலிஸமுமல்ல; சமூக நீதியுமல்ல. எல்லோரையும் சூதாடிகளாக மாற்றும் திட்டமே இது. ஏமாந்துபோன ஏராளமான மக்களை மீண்டும் மீண்டும் பரீட்சை பார்க்கச் சொல்கின்றனர். அவர்களும் சுலபமாகச் சபலத்துக்கு ஆளாகின்றனர்.

ராஜ்யங்களுக்கு மத்திய சர்க்கார் உறுதியாக உத்தரவு பிறப்பித்தால், அவை கீழ்ப்படிந்து, லாட்டரித் திட்டத்தைக் கைவிடும் என்று நிச்சயமாக நம்புகிறேன். கீழ்ப்படியாமல் எந்த ராஜ்யமேனும் லாட்டரியைத் தொடர்ந்தால், அந்த லாட்டரி சட்ட விரோதமானது என சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளிக்கும் எனக் கருதுகிறேன். சட்டம் குறித்து எனது இக்கருத்து தவறாகுமானால், லாட்டரித் திட்டத்தை நிறுத்த வேண்டும்

என யூனியன் சர்க்கார் சட்டமே இயற்றி விடலாம்.

இது காந்தி நூற்றாண்டு. பாரதத்தைச் சூதாட்டப் பாசறை யாக்குவதை எதிர்த்து மகாத்மா எழுப்பும் கண்டிப்பான குரலை மக்கள் தமது இதயங்களில் கேட்டுக் கொள்ள முடியும். இவ்விஷயத்தில் ஸ்ரீ மொரார்ஜி தேசாயின் கருத்து எனக்குத் தெரியும். இத்தகைய கருத்துக் கொண்டிருந்த போதிலும் அவரால் லாட்டரித் திட்டத்தைத் தடை செய்ய முடியாவிடில், அவர் தமது பதவியிலிருந்து விலகிவிட வேண்டும்.

பணத்தாசை என்பது தனி மனிதர்களின் விவேகத்தைக் குழப்புவதுபோல், மந்திரிகளின் விவேகத்தையும் குழப்புகிறது. 'தவறு என்று தெரிந்தும், தவிர்க்க முடியாத உந்தலால் மக்கள் தவறு செய்வது ஏன்?' என்று கீதையில் அர்ஜுனன் கேட்கிறான். 'கண்ணாடியைத் தூசி மூடுவது போலும், நெருப்பைப் புகை மூடுவது போலும் ஆசையே விவேகத்தைக் குழப்புகிறது. உள் சக்தியைத் திரட்டி இந்தப் பெரும் எதிரியைத் தாக்கு' என்று கண்ணன் மறுமொழி கூறுகிறான்.

லாட்டரித் தூண்டில் போட்டுச் சர்க்காருக்குச் சிறிது பணம் சேர்க்கும் மந்திரிகள், அதே நேரத்தில் மக்களை நேர்மையான உழைப்பிலிருந்து வேறு திசையில் திருப்புவதால் ஏற்படுகிற பெரிய நஷ்டத்தை உணரவில்லை. லட்சோப லட்சம் மக்களின் நஷ்டங்கள் ஒன்று சேர்ந்துதான் ஒரு சிலருக்குப் பரிசும், இடைத் தரகர்களுக்குக் கமிஷனும் கிடைக்கிறது என்ற உண்மையை மக்கள் அதிக காலம் உணராமல் வைத்திருக்க அரசாங்கத்தால் இயலாது.

காந்திஜி மீண்டும் நம் இதயங்களை ஆள வருவார். நம் தேசம் உயர்ந்தோங்கும். தவறுகளும் துன்பங்களும் விலகும். சந்தேகம் வேண்டாம். அஞ்ச வேண்டாம். சந்தேகமும் அச்சமும் வந்தால் நம்மை ஆண்டவனின் காப்பில் ஈடுபடுத்திக் கொள்வோம். அந்த நங்கூரம் என்றும் நிலைத்திருக்கும்.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

அண்ணாதுரையைப் [illegible] பின்பற்றியவர்கள் அவரைப் பின்பற்றியதுமட்டுமின்றி, அவரை நேசித்தனர். மக்களின் அன்பைக் கவருகிற இத்திறனே தலைவர்களை உண்டாக்குகிறது.

அண்ணாதுரையின் மறைவால் நான் எவ்வளவு துயருற்றிருக்கிறேன், ஏன் துயருற்றிருக்கிறேன் என்பதை அனைவரும் அறிவர்.

மகத்தான இறுதிச் சடங்கு முடிந்துவிட்டது. இதனை ஒரு தேசிய நிகழ்ச்சியாக்குவதற்கு யூனியன் சர்க்கார் சகல விதத்திலும் உதவியதில் மகிழ்ச்சி யடைந்தேன். முக்கியமான பிரச்னைகளில் பெரும் மாறுபாடு இருப்பினும், டில்லிக்கும் தமிழக சர்க்காருக்கும் இடையே நிலவும் சுமுக உறவுக்கு இதுவும் துணை புரிந்திருக்கிறது.

★

மலேசியப் பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான் அவர்கள், அந்நாட்டுத் தமிழ்ப் பத்திரிகைகள் திரு அண்ணாதுரையின் மரணச் செய்தியைப் பக்கம் பக்கமாகப் பிரசுரிப்பது அவர்களுடைய மலேசிய விசுவாசத்துக்கு உகந்ததல்ல எனக் கருதுகிறார்.

மலேசியாவில் இருப்பினும் சரி, வேறெந்த நாட்டில் இருப்பினும் சரி, அங்குள்ள தமிழ்ப் பத்திரிகைகள், தமிழக முதன் மந்திரியின் மரணச் செய்தி பற்றிப் பக்கம் பக்கமாகப் பிரசுரித்துப் புகழ்மாலை சூட்டுவது இயற்கையே.

மலேசியாவை ஒற்றுமையாகவும் மகிழ்ச்சியாகவும் வைத்திருப்பதில் ஸ்ரீ துங்குவுக்குள்ள விசாரத்தையும், சிரமத்தையும் நாம் புரிந்து கொள்ளவேண்டும். மலேசியாவில் உள்ள தமிழர்கள் சந்தோஷமாக இருக்கிறார்கள் — இந்தியாவில் இருந்தால் அவர்கள் இவ்வளவு சந்தோஷமாக இருக்க முடியாது எனலாம். அவர்கள் மலேசிய அரசாங்கத்திடம் தாங்கள் விசுவாசமும் நன்றியும் கொண்டிருப்பதாக அந்நாட்டுப் பிரதமர் உறுதி பெறுவதற்குச் சகலமும் செய்ய வேண்டும்.

எனினும், பொதுமக்களின் பேராதரவு பெற்ற தமிழக முதன் மந்திரியின் மறைவில் தமிழர்கள் அடைந்துள்ள மகத்தான சோகத்திலிருந்து மலேசியப் பிரதமர் தமக்குப் பாதகமாக ஏதோ ஒன்றைக் கற்பனை செய்வது பெருந் தவறாகும்.

### மகாத்மாவின் மணிமொழி

உள்ளுணர்வின்படி நான் அனைத்துடனும் ஒத்துழைப்பவனே; எனவே, ஒத்துழைப்பிலிருந்து ஈனத்தனத்தையும் போலித்தனத்தையும் அகற்றுவதற்காகவே என் ஒத்துழையாமை உத்தேசிக்கப்பட் டிருக்கிறது. ஈனமாகவும் போலியாகவும் ஒத்துழைத்தால், அது ஒத்துழைப்பு என்ற பெயருக்கே இழுக்கு.



# நாடாளுமன்றத்தில் அண்ணா

எஸ்.எஸ்.மாரிசாமி.எம்.பி

நாடாளுமன்ற மேலவை உறுப்பினராக ஆன சில நாட்களில் அண்ணா அவைக்கு வந்தார். அவர் வந்து அமர்ந்ததுமே அவையில் சிறிது பரபரப்பு இருந்தது. பலர் அவரைக் கட்சி பேதமின்றி இன்முகத்தோடு வரவேற்ற காட்சியினைக் கண்டேன். அப்போது கேள்வி நேரம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. சிறிது நேரம்தான் அண்ணா அமர்ந்து இருந்தார். பிறகு வெளியே நடந்து மத்திய மண்டபத்துக்கு வந்து விட்டார். அவரைப் பின்தொடர்ந்து வந்த நண்பர்களுடன் நானும் கலந்து கொண்டேன். மத்திய மண்டபத்தில் அமர்ந்த அண்ணா, 'இப்பொழுது என்ன விவாதம் நடைபெறுகிறது?' என்று நண்பர்களைப் பார்த்துக் கேட்டார். 'உபமானிய பட்ஜெட்' நடைபெறுகிறது என நண்பர்கள் சொன்னார்கள். தமக்குப் பேச வாய்ப்புக் கிடைக்குமா என அண்ணா கேட்டதற்கு, ''தங்களுக்கா! நிறைய உண்டு!'' என்று ஓர் உறுப்பினர் கூறினார். அந்த உறுப்பினர் உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த காங்கிரஸ்காரர். அவையில் எந்த ஒரு பிரச்னை வந்தாலும் இவர் எழுந்து பேசுவார். தீவிரவாதியுங்கூட. காங்கிரஸ் கம்யூனிஸ்டாக மாறிக் கொண்டு வருகிறது என்ற வாதம் எவ்வளவு உண்மையானது என்பதை உணர இவர் ஒருவரது பேச்சைக் கேட்டாலே போதும். அத்தகைய தீவிர காங்கிரஸ்காரர்தான் அண்ணாவிடம், 'தங்களுக்கா! பேச நிறைய இடம் உண்டு' எனக் கூறினார். சிறிது நேரத்தில் அண்ணா எழுந்து நூலகத்துக்குச் சென்று விட்டார். நாங்கள் அனைவரும் அவைக்குத் திரும்பினோம். அன்று முழுதும் அண்ணா அவைக்கு வரவில்லை. அடுத்த நாள் அவையில் சிறிது நேரம்தான் இருந்தார், பிறகு நூலகத்துக்குச் சென்று விட்டார் எனக் கேள்வியுற்றேன்.

அடுத்த நாள் காலை ஒன்பது மணி அளவில் நண்பர் ராஜாராம் டெலிபோன் செய்தார். அன்று அண்ணா அவையில் பேச விரும்புவதாகவும், இதை அவைத் தலைவரிடம் நான் தெரியப்படுத்த வேண்டுமென்பதாகவும் கூறினார். மெத்த மகிழ்ச்சியோடு இச்செய்தியை ஏற்றுக் கொண்டு அவைக்கு முன்கூட்டியே சென்றேன். அவைச் செயலாளரிடமும், அப்போது தலைவராக இருந்த உயர்திரு ஜாகிர் ஹுசேன் அவர்களிடமும் அண்ணா பேச நேரம் ஒதுக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டேன். பிற்பகல் 12-30 மணிக்கு அண்ணா பேசலாம் என்றார்கள். இதை அண்ணா அவர்களுக்கு அறிவிக்க, அவரும் சரி என்றார். இதற்குள்ளாக இச்செய்தி சபை முழுதும் பரவியதுடன் நிருபர்கள் மத்தியிலும் பரவிவிட்டது. இந்து பத்திரிகைக்கு அப்போது நிருபராக இருந்தவர் காலஞ்சென்ற இ. கே. ராமசாமி. அண்ணா பேச்சு என்றால் அவருக்கு அலாதியான பிரியம். எனவே, அவர் வடநாட்டுப் பத்திரிகைக்காரர்களையும் மேல்நாட்டு நிருபர்களையும் அழைத்துக் கொண்டு குறித்த நேரத்தில் வந்து விட்டார். சபையிலும் வழக்கத்துக்கு மாறாகப் பெருங்கூட்டம் இருந்தது. தயாபாய் பட்டேலும், ஜனசங்கத் தலைவரான வாஜ்பாயும் எதிர்க்கட்சிகளின் சார்பாகப் பேசி விட்டார்கள். அண்ணா பேச எழுந்த போது மணி 12-50. பத்து நிமிடம்தான் அண்ணா அவர்களுக்கு இருந்தது. ஏனெனில், ஒரு மணிக்கு அவையை இடைவேளைக்காக ஒத்தி வைத்து விடுவார்கள். எனவே, பத்து நிமிடத்தில் அண்ணா பேச்சை முடிக்க வேண்டும் என்ற நிலை. ஆனால் இவர் பேச எழுந்ததும் இவரிடத்தில் என்றுமே அன்பும் மரியாதையும் காட்டும் உதவித் தலைவரான ஸ்ரீமதி வயலெட் ஆல்வா சபை இன்று ஒன்றரை மணி வரை நடைபெறும் என்று அறிவித்தார். இதைக் கேட்டதும் அண்ணாவுக்காகச் சபை நீடிக்கிறது என்ற மகிழ்ச்சி எங்களுக்கெல்லாம் ஏற்பட மேஜைகளைத் தட்டி எங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்துக்கொண்டோம். அண்ணா பேச ஆரம்பித்தார். புள்ளி விவரங்கள் எல்லாம் எடுத்துக் காட்டி நிதி மந்திரி கொண்டு வரக் கூடிய உபமானிய கோரிக்கை அவசியம் இல்லாதது என்று பத்து நிமிடங்கள் பேசினார். அதன் பிறகு அரசியல் விமரிசனம் தொடங்கிற்று. அவர் சொன்னார் :

''உதவித் தலைவர் அவர்களே! அடுத்ததாக நான் சில மேற்கோள்களைக் காட்ட ஆசைப்படுகிறேன். இந்த மேற்கோள்கள் அத்தனையும் காங்

சென்னையில் அண்ணா - இந்திரா காந்தி சந்திப்பு



கிரஸில் ஒரு காலத்தில் இருந்த தலைவர்களாலும் இன்றும் காங்கிரஸில் உள்ள பெரியவர்களாலும் நாட்டிலே பேசப்பட்டவை. அந்தப் பேச்சுக்களைத் தான் மேற்கோளாக எடுத்துச் சொல்கிறேன். காரணம் இக்கருத்துக்களை நானாகச் சொன்னால் எனது மதிப்புக்குரிய காங்கிரஸ் நண்பர்கள் புருவத்தை நெறிப்பார்கள்.....'' இந்தப் பீடிகையுடன் அண்ணா அவர்கள் ஸ்ரீபிரகாசா, ஆச்சாரிய கிருபளானி, மந்திரி சஞ்சீவய்யா, அன்றையக் காங்கிரஸ் அக்ராசனராக இருந்த காமராஜ் ஆகியோர் நிகழ்த்திய உரைகளை எடுத்துக் காட்டி இந்திய சர்க்காரின் பொருளாதாரம் நிலைதடுமாறிக் காற்றடித்த திசையெல்லாம் திரும்பி லட்சியமில்லாத கப்பல் போல் பஞ்சம் என்கிற கடலில் தத்தளிக்கிறது என்று விளக்கினார். இந்த மேற்கோள்களுக்கு முன்னும் பின்னும் நாட்டிலே வறுமை எவ்வாறு மக்களை வாட்டுகிறது என்பதையும், ஏழை மக்கள் வயிறு காய எவ்வாறு வாடுகிறார்கள் என்பதையும் விளக்கித் தமது பேச்சுக்கு முத்தாய்ப்பு வைத்தது போல, ''இவ்வளவு கேடுகளை விளைவித்தபிறகும் உங்களுக்கு ஆளுவதற்கு ஆசை எப்படித்தான் இருக்கிறதோ — எனக்குப் புரியவேயில்லை, — ஏன் நாட்டுக்கே புரியவில்லை'' என்று பேச்சை முடித்தார். சபையின் எதிர்த்தரப்பில் பலத்த கைதட்டல் எழுந்தது. காங்கிரஸார் பேச்சு மூச்சுக் காட்டவில்லை. அவர்கள் அத்தனைபேரும் சபை கலைந்து வெளியே வந்தபோது அண்ணாவின் கரங்களைப் பிடித்துக் குலுக்கி ''உங்கள் கருத்தை ஏற்காவிட்டாலும் பேச்சினைப் பாராட்டுகிறோம்'' என்றார்கள். அண்ணா அன்று முப்பது நிமிடங்களுக்கு மேலாகப் பேசினார். இது வேறு எந்த உறுப்பினருக்கும் கிடைக்காத பெருமை என்பதோடு, வேறு எந்த உறுப்பினரும் சபையைத் தனது பேச்சால் கட்டுண்ட நாகம் போல் வைத்திருக்க முடியாது என்பதும் மறுக்க முடியாத உண்மை.



தென் சென்னை நாடாளுமன்றத் தொகுதியில் வேட்பாளராய் நின்ற அண்ணா வோட்டுப் போடுகிறார்.

பாராளுமன்றத்தில் அதிகமாகப் பங்கு கொள்ள அண்ணாவுக்கு நேரம் இருப்பதில்லை. ஒரு மாதம் சபை நடந்தால் அவரால் பத்து நாட்கள் கூட அங்கு இருக்க முடியாது. மேலும் விமானப் பயணத்தைக் கூடுமான வரை அவர் மேற்கொள்ள மாட்டார். இரண்டு நாட்களை ரயிலில் கழித்துத்தான் டெல்லி வருவார். அதே போல ரயிலிலேயே திரும்புவார். இடையிலே உள்ள ஆறு நாட்களில் மூன்று நாட்கள் அவைக்கு வருவார். அதுவும் ஒரு சில மணி நேரம்தான் அவையிலே இருப்பார். எஞ்சிய நேரங்களில் மத்திய மண்டபத்தில் சிறிது காலமும் எஞ்சிய பெரும்பாலான பொழுதை நூலகத்திலும் கழிப்பார். நூலகம் என்றால் அவருக்குச் சோறும் வேண்டாம், தண்ணீரும் வேண்டாம். நண்பர்கள் வற்புறுத்தி அழைத்துச் சென்றால் ஒழியச் சாப்பிட மாட்டார்.

மத்திய மண்டபத்தில் எங்கே அவர் உட்காருகிறார் என்று தெரிந்து கொள்ள ஒரு சுலபமான வழி உண்டு. மண்டபத்தின் எந்தப் பகுதியில் சிரிப்பொலி அதிகமாகக் கேட்கிறதோ, எங்கு இளைஞர் கூட்டம் மொய்த்துக் கொண்டு நிற்கிறதோ அந்த இடம் சென்றால் அண்ணா உட்கார்ந்திருப்பதைக் கண்டு கொள்ளலாம். அவர் உள்ள இடம் கலகலப்பாக இருக்கும். கேலியும் கிண்டலும் மலிந்து, அனைவரும் சிரித்த முகமாய் இருப்பார்கள். சகல கட்சிக்காரர்களும் அவரிடத்தில் பரிவோடும் பாசத்தோடும் வந்து உட்கார்ந்து பேசுவார்கள். அவரது பண்பைக் கண்டு, தன்னடக்கத்தைப் பார்த்து மகிழ்வார்கள்.

அண்ணாவின் மற்றோர் உரை மிகவும் குறிப்பிடத் தக்க பேருரையாகும். பாராளுமன்றச் சரித்திரத்தில் முக்கிய உரையாக அதைச் சரித்திர ஆசிரியர்கள் குறிப்பிடுவார்கள் என்பது திண்ணம்.

இந்தி எதிர்ப்பு வேகமாக நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில்—துப்பாக்கி வெடிச் சத்தம் தமிழகத்தைக் கிடுகிடுக்க வைத்த நேரத்தில்—மாணவர் படை முழு மூச்சாக இந்தியை எதிர்த்த அந்தப் போராட்ட சமயத்தில் அண்ணா மேலவையில் பேசிய பேச்சு அது. அப்போது உள்துறை அமைச்சராக இருந்தவர் உயர்திரு குல்ஜாரிலால் நந்தா. சென்னையில் அடக்குமுறை நடத்திய காங்கிரஸ் ஆட்சியைப் புகழ்ந்து அவர் பேசி

வந்த காலம். அந்த நேரத்தில் அண்ணா டெல்லிக்குப் பேச வருகிறார் என்ற செய்தி முன்கூட்டியே எங்களுக்கு வந்து விட்டது. அவரை வரவேற்கவும், டெல்லி விவரங்களையெல்லாம் அவருக்கு எடுத்துச் சொல்லவும் நாங்கள் ஐந்தாறு பேர் சென்றிருந்தோம். நாங்கள் சொன்னவற்றையெல்லாம் பொறுமையாகக் கேட்ட அண்ணா, இறுதியில் என்னைத் தனியாக அழைத்து 'ராஜாஜி தங்களுக்கு ஏதாவது சொல்லி யனுப்பினாரா?' என்று கேட்டார். ''தனியாக எதுவும் சொல்லி யனுப்பவில்லை'' என்றேன். தொடர்ந்து ஆட்சி மொழி விஷயத்தில் ராஜாஜி அவர்கள் என்ன கருத்துக்களைக் கொண்டிருக்கிறார் என்பதை விவரித்தேன். அதைக் கவனமாகக் கேட்ட அண்ணா, 'ராஜாஜி சொல்வதுதான் சரி' என்றார். அடுத்த நாள் அவரது பேச்சுக்கு ஏற்பாடு ஆயிற்று. அன்றும் பிற்பகல் இடைவேளைக்குச் சற்று முன்புதான் அவருக்குப் பேச வாய்ப்பு இருந்தது. அப்போது அவைக்குத் தலைவராக இருந்தவர் இன்று ராஷ்டிரபதியாக உள்ள ஜாகிர் ஹுசேன். இவர் சட்ட திட்டங்களில் சற்றுக் கண்டிப்பானவர். எனவே அண்ணாவுக்கு அதிக நேரம் கிடைக்காதே என்ற கவலை எங்களுக்கு இருந்தது. ஆனால் அண்ணாவோ சிறிதும் கவலைப்படாமல் பேச எழுந்தார். ஒருமைப்பாடு என்றால் என்ன என்பதற்கு அற்புதமான விளக்கம் கொடுத்தார். உள்ளத்தில் ஒருமைப்பாடு பிறக்க வேண்டுமே தவிர சட்டத்திலே அது திணிக்கப்படுவது உண்மையான ஒருமைப்பாடு ஆகாது என்று தத்துவ விளக்கம் கொடுத்தார். காந்தி அடிகளின் மேற்கோள் ஒன்றை எடுத்துச் சொல்லி இந்த வாதத்துக்கு அரண் அமைத்தார். அடுத்து மொழி என்பது என்ன என்றும், அது எப்படி இருக்க வேண்டும் என்பதையும், காலத்துக்கு ஏற்ற வளர்ச்சி அதற்குத் தேவை என்பதையும் எடுத்துக் காட்டி இந்த இலக்கணங்கள் தமிழுக்கு உண்டா, இந்திக்கு உண்டா என்பதை விளக்கி, ஓர் உதாரணமும் சொன்னார். ''ஆல் இண்டியா ரேடியோ மே ஹிந்துஸ்தானி மியூஸிக் அச்சா ஹை'' என்று ஓர் உறுப்பினர் பேசியதை எடுத்துச் சொல்லி, இதில் எத்தனை வார்த்தைகள் கலப்படமானவை என்பதைக் குறிப்பிட்டு இதையே தமிழில் கலப்படமின்றிக் கூறமுடியும் என நிரூபித்து, ''ஏன் தமிழ் அகில இந்தியாவுக்கும் ஆட்சி மொழியாக வரக் கூடாது என்று நான் கேட்கலாமல்லவா?'' என்றார். அடுத்துத் தமிழ் நாட்டில் நடைபெற்ற அடக்குமுறையையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக விவரித்து, திரு நந்தா அவர்கள் இந்த அடக்குமுறையை நடத்தியவர்களைப் பாராட்டுவது சரிதானா என்று கேட்டார்.

அண்ணா இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போது மணி ஒன்று ஆகிவிட்டது. எனவே அவைத்தலைவர் அண்ணாவைப் பார்த்து, 'மணியாகிவிட்டது' என்றார். அப்போது அவையில் நாங்கள் எல்லோரும் எதிர்பாராத வகையில் ஓர் அதிசயம் நடைபெற்றது. சில காங்கிரஸ் உறுப்பினர்கள் எழுந்து நின்று, ''அண்ணா அவர்கள் பேசட்டும், பேசட்டும்'' என்றனர். இந்த மாதிரியாக எதிர்க் கட்சிக்காரர்கள் தங்களைத் தாக்கக் கூடிய ஒரு பேச்சாளரின் பேச்சை ஆர்வத்தோடு கேட்டதையும் அவர் தொடர்ந்து பேச வேண்டும் எனக் கோரியதையும் சபையில் கண்டது இதுவே முதல் தடவையாகும். இப்பொழுது அவைத் தலைவர் என்ன செய்ய முடியும்? அவர் சபையை இன்னும் பத்து நிமிடங்கள் நீடிக்கச் செய்து அண்ணாவைப் பேச அனுமதித்தார். அண்ணா தொடர்ந்து பேசுகையில் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியின்போது அன்றைய மந்திரிகளாக இருந்த திரு சுப்பிரமணியமும், திரு அழகேசனும் ராஜிநாமாச் செய்ததையும், பின்னர் அவர்கள் ராஜிநாமாவை வாபஸ் பெற்றதையும் சுட்டிக் காட்டி ''உங்கள் தரப்பிலேயே இத்தனை ஆத்திரம் இருந்தால் எதிர்த்தரப்பினராகிய எங்களுக்கு எவ்வளவு பரபரப்பு இருந்திருக்கும்?'' எனக் கேட்டபோது அவையில் இருந்த குல்ஜாரிலால் நந்தாவும், திரு சுப்பிரமணியமும் தலையைக் குனிந்து கீழே பார்த்துக் கொண்டார்கள்.

அண்ணா அவர்கள் பேச்சை முடிக்கும்போது தலைவர் அனுமதித்த பத்து நிமிடமும் கடந்து விட்டது. ஆனால் சபையில் ஒருவரும் எழுந்திருக்கவில்லை என்பதோடு மட்டுமல்ல, வயதான காங்கிரஸ்காரர்களும், அனுபவசாலிகளான சுயேச்சை உறுப்பினர்களும் அண்ணா பேச்சில் நியாயம் இருக்கிறதெனப் பாராட்டினார்கள். இந்த உரையின்போது அனைவரையும் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்த சம்பவம் ஒன்றும் நடைபெற்றது. அண்ணா பேசும்போது ஓர் உறுப்பினர் இடையிடையே எழுந்து அண்ணாவை மறுத்துப் பேச ஆசைப்படுபவர் போல் காட்டிக்கொண்டார். இதைப் பலமுறை கவனித்த அண்ணா என்ன நினைத்தாரோ தெரியவில்லை. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அந்த உறுப்பினர் எழுந்ததும் அண்ணா சடாரென உட்கார்ந்து விட்டார். சபையினர் அண்ணா பேச்சை இடையிலேயே நிறுத்தி உட்கார்ந்துவிட்டாரே என அவரைப் பார்க்க, அவர் எழுந்து நின்ற உறுப்பினரைச் சுட்டிக் காட்டி, 'அவர் ஏதோ சொல்ல விரும்புகிறார், அவர் சொல்லட்டும்' என்றார். அனைவரும் அந்த உறுப்பினரைப் பார்க்க, அவர் அண்ணா தம்மை மாட்டி வைத்துவிட்டாரே எனத் திக்குமுக்காடித் திணறிப் பரிதாபமாக நின்றார். சபை சிரிக்கவும் பெரிய வேடிக்கையாகப் போய்விட்டது. பிறகு அந்த உறுப்பினர் அண்ணா பேசுகிற வரையில் எழவும் இல்லை; வாய் திறக்கவும் இல்லை.

நாடாளுமன்ற வரலாற்றில் மிகப் பெரிய மேதைகள் என்ற பட்டியலில் அண்ணாவுக்கு நிச்சயமாக நிரந்தரமான இடம் உண்டு. அவர் மறைவு கேட்டுத் தமிழ் மக்கள் எவ்வளவு துக்கம் அடைந்தார்களோ அதே அளவுக்கு அவரோடு நாடாளுமன்றத்தில் உறுப்பினர்களாயிருந்த அத்தனை பேரும் எத்தகைய வேறுபாடும் இன்றி வருந்துவர் என்பதும் உண்மையே. வாழ்க அவர் நாமம்

---

இதைத் தொடர்ந்து, 'ஆட்சிபீடத்தில் அண்ணா', 'மக்களின் அண்ணா', 'கலைஞர் அண்ணா', 'குடும்பத் தலைவர் அண்ணா' என்ற தலைப்புக்களில் அடுத்து வரும் கல்கி இதழ்களில் கட்டுரைகள் இடம்பெறும்.

இம்மாதம் பதின்மூன்றும் தேதி ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்கள் பீடாரோஹணம் செய்து அறுபத்திமூன்றாவது ஆண்டு பிறக்கிறது. இந்நன்னாளை யொட்டிச் சிவராத்திரியும் நிகழ்கிறது. பெயராலும், செயலாலும் சங்கரராகத் திகழும் ஸ்ரீ ஆசாரியரவர்களுக்கு இதய பூர்வமான வணக்கங்களைச் சமர்ப்பணம் செய்கிறோம்.



# அருளரசைக் கண்ட அரச குடும்பம்

டாக்டர் டி. எம். பி. மகாதேவன்

கிரீஸின் தலைநகரில் இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் சர்வதேச கலாசார மகாநாடு 'ஏதென்ஸ் கூட்டம்' எனப்படுகிறது. ஏதென்ஸ் கூட்டத்தின் நான்காம் தினம் நான் பேச வேண்டிய முறை வந்தது.

'இந்தியாவின் பாரம்பரியச் செல்வம்' என்பது பற்றிப் பேசினேன். முடிவில் கூறினேன் :

''விஞ்ஞான, தொழில் நுணுக்கச் சூழ்நிலையில், இந்தியாவின் பாரம்பரியச் செல்வம் எதிர்காலத்தில் என்னவாகும் என்பது பற்றி என் நாட்டிலும், வெளிநாடுகளிலும் உள்ள அறிஞர்களின் மனத்தில் சந்தேகம் பரவலாக உள்ளது. சில மாதங்களுக்குமுன் இந்தியாவுக்கு விஜயம் செய்த ஒரு யூகோஸ்லாவிய அறிஞர் இச்சந்தேகத்தை வெளியிட்டார். தட்சிண பாரதத்தில் இன்றும் ஜீவதசையில் இயங்கி வரும் முனிவரான காமகோடி பீடத்து சங்கராசாரியர்களிடம் அவர் இச்சந்தேகத்தை வெளியிட்டார். புராதன பாரதத்தில் வழங்கி வந்த ஆதரிசமான துறவு வாழ்வை அப்படியே அநுஷ்டித்து வரும் முனிவர், சற்றும் தயங்காமல் பின்வருமாறு விடை பகர்ந்தார்: 'இந்தியாவின் ஆன்மாவுக்கு ஓர் உற்பாதமும் நேராது. நவீன விஞ்ஞானமும், தொழில் நுணுக்க அறிவும் ஏதாவது செய்யக் கூடுமாயின், அது இன்னமும் நிழலாடி வருகிற மூடநம்பிக்கைகளையும் குருட்டு அபிப்பிராயங்களையும் நீக்குவதாகவே இருக்கும். எத்தனையோ சவால்களுக்கு இந்தியப் பண்பாடு முகம் கொடுத்து, ஒவ்வொரு முறையும் ஜயசாலியாக வெளிவந்திருக்கிறது.'

''சங்கராசாரிய முனிவர் சொன்னதைவிட, இந்திய பாரம்பரியத்தின் அமரமான இயல்புக்கு வேறு அதிகாரபூர்வமான அத்தாட்சி வேண்டியதில்லை.''

இந்தப் பேச்சுக்கு வந்திருந்த கிரீஸின் ராஜ குடும்பத்தினர், ஸ்ரீ காஞ்சி சங்கராசாரிய ஸ்வாமிகளைப் பற்றிச் சொல்லப்பட்டதைக் குறிப்பாகக் கவனத்தில் கொண்டனர். கிரீஸ் நாட்டின் ராஜ மாதாவாகிய மேதகு அரசியார் ஃப்ரெடரிகாவும், அவரது குமாரியான மேன்மை தங்கிய இளவரசி ஐரீனியும் சிறிது காலமாகவே தியான அப்பியாசம் புரிந்து வந்தவர்கள். ஸ்ரீ ரமண மகரிஷிகளின் உபதேசங்களின் வழியே அவர்கள் அத்வைத வேதாந்தத்திலும் பரிசயம் கொண்டிருந்தனர். காலம் சென்ற மன்னர் பால் முன்பு இந்தியாவுக்கு ராஜாங்க விஜயம் செய்த போது அவர்களும் உடன் வந்திருந்தனர். ஆனால் அப்போது அவர்களுக்கு இந்தியாவின் ஆன்மிகத் துறையில் நெருக்கமான தொடர்பு கொள்ளப் பொழுதும், வாய்ப்பும் இல்லை.

இப்போது ராஜ மாதாவும், இளவரசியும் தாங்கள் மறுமுறை இந்தியாவுக்கு வந்து சுவாமிகளைத் தரிசிக்க விரும்புவதாகத் தெரிவித்தனர். இந்த விருப்பத்தின் நிறைவேற்றமாகவே அவர்கள் 1966 நவம்பர் — டிஸம்பரில் பாரதம் வந்தனர்; சுவாமிகளைச் சந்தித்தனர். அவ்வாண்டு டிஸம்பர் 4, 5 தேதிகளில் காளஹஸ்தியில் சந்திப்பு நிகழ்ந்தது. அப்போது சுவாமிகளிடமிருந்து பெற்ற கரைகாணாக் கருணைப் பொழிவால் அவ்விருவரும் அப்படியே கண் கலங்கி விட்டனர். மறக்க வொண்ணாத இந்தச் சந்திப்புப் பற்றிப் பின்வருமாறு எழுதினர் மேதகு அரசியார்:

''கலப்பற்ற தூய ஆன்மிகமே அங்கு நிறைந்திருந்தது. அவருக்கு (சுவாமிகளுக்கு) நெருக்கமாக எங்களைக் கொண்டு சேர்த்த தெய்வ சங்கற்பம் எவ்வளவு விசித்திரமானது !''

மேன்மை தங்கிய இளவரசி மொழிந்தார் :

''உரிய காலம் கனிகிற போது தெய்வ சங்கற்பமானது உரிய பொருட்களைக் கொண்டு வந்து சேர்க்கிறது என நம்புகிறேன். பரிபூரணத்துவத்துடன் எங்களுக்கு ஏற்பட்ட இச்சந்திப்பு தெய்வசங்கற்பத்தின் மகத்தான வரப்பிரசாதமாகும். பரிபூரணரின் அநுக்கிரகத்தை நினைவு கொள்கையில் என் இதயத்தின் அடி ஆழம்வரை உலுக்கி எடுக்கப்படுகிறேன்.''

இதற்குச் சரியாக இரண்டாண்டுகளுக்குப் பின்னர் ராஜமாதாவும், இளவரசியும் மீண்டும் சுவாமிகளைக் காண வந்தனர். இம்முறை அரசியாரின் மருமகள் டோரதியா இளவரசியும், அவரது மருமகனாகிய கார்ல் இளவரசரும் உடன் வந்தனர்.

1968 டிஸம்பர் 6, 7, 8ம் தேதிகளில் அவர்கள் மகுலிப் பட்டணத்தில் சுவாமிகளைச் சந்தித்தனர். மொத்தத்தில் அவருடன் எட்டு மணி நேரத்துக்கு அதிகமாகப் பொழுதைக் கழித்தனர் ; அவரது ஞானத்தையும் அநுபூதியையும் ஆழ்ந்து பருகினர்; அவரது ஆன்மிக மகோன்னதத்தின் பூரண ஜோதியில் திளைத்தனர். டிஸம்பர் 3ந் தேதி அவர்கள் சென்னைக்கு வந்ததிலிருந்து, மகுலிப் பட்டண யாத்திரை முடிந்து, 11ந் தேதி சென்னையிலிருந்து புறப்படுகிற வரையில் அவர்களுக்கு இருந்தது ஒரே சிந்தனைதான் — சுவாமிகளைப் பற்றிய சிந்தனையே அது. அவரைச் சந்தித்தது தமது வாழ்விலேயே ஆண்டவன் அளித்த மாபெரும் செல்வம் என அவர்களில் ஒவ்வொருவரும் கருதினர். அந்த அளவுக்கு அவர்கள் மகா குருவின் கிருபையைப் பெற்றிருந்தார்கள் !

அவர்கள் தனித் தனியாகவும், சேர்ந்தும் ஆசாரியாளைப் பன்முறை சந்தித்தனர். அதைப் பார்ப்பதே ஓர் அற்புத அநுபவமாக இருந்தது. ஒரு புறத்தில், இந்த அந்நிய தேச ராஜ குடும்பத்தினர் ஆன்மிகத் தேட்டத்தில் ஆழ்ந்த அந்தரங்க சுத்தத்தையும், தீவிரப் பற்றையும் காட்டிக் கேள்விகள் விடுத்தனர். மறுபுறத்தில் ஆசாரியரோ இந்த உள்

தேட்டத்துக்கு உதவி புரிகிற அம்சங்களில் கன கச்சிதமான போதனைகள் தந்தார்; மிக மிகத் தெளிந்த விளக்கங்கள் தந்தார்.

இந்த உரையாடல்களில் புற உலகம் அபூர்வமாகவே பிரஸ்தாபிக்கப் பட்டது. கிரேக்க அரச குடும்பத்தினருக்கு முக்கிய விசாரமாயிருந்தது அக வாழ்வே. அதில் ஒளியும், வழித் துணையும் தரக்கூடிய ஊற்றுக்களில் முதன்மை பெற்ற ஊற்றுக்கே வந்து விட்டோம் என உறுதி பெற்றனர்.

கிரேக்க அரச குடும்பத்தினருள் தியானப் பயிற்சியில் சமீப காலமாகவே ஈடுபட்டவர்களுக்கு சுவாமிகள் விரிவாக யோசனைகள் கூறிப் போதித்தார். ஒவ்வொரு தியான அப்பியாஸ காலத்தையும் ஏறக்குறைய இரு பாதிகளாகப் பிரித்துக் கொள்ள வேண்டும்; முதல் பாதியில் சுவாசத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றார். மூச்சை ஆழ்ந்து உள்ளுக்கு இழுத்தபின், சிரமமின்றி எவ்வளவு நாழிகை சுவாசத்தை அடக்க முடியுமோ அவ்வளவு நாழிகை அடக்க வேண்டும்; ஒருவரால் சிரமத்துடன் உயர்ந்த பட்சம் நூறு விநாடி மூச்சடக்க முடியுமாயின் அவர் ஐம்பது விநாடிகள் அடக்கினாலே போதும் என்றார். மறுபடி மூச்சை வெளிவிடுகையில் எவ்வளவு நிதானமாக முடியுமோ அப்படி விடவேண்டும் என்றார். இதையே ஒவ்வோர் அப்பியாச காலத்திலும் முதற் பாதிப் பொழுதில் பயில வேண்டும் என்றார். ஒவ்வொரு முறையும் சுவாசத்தை அடக்கி வைக்கும் போது, அகில உலகுக்கும் நமது ஜீவனுக்கும் ஆதாரமாக உள்ள சர்வ வியாபகமான தெய்வ சக்தியைச் சில கணங்கள் சிந்திக்க வேண்டும் என்றார்.

தியானம் செய்கிற கால அளவுகளைத் தினமும் படிப்படியாக அதிகமாக்கிக் கொண்டே போக வேண்டும்; முறைக்கு அரை மணி வீதம் காலையும் மாலையும் இரண்டு முறை தியானம் செய்கிறவர்கள், நடுவில் ஒரு சமயத்தில் கால்மணி தியானப் பயிற்சி புரியலாம் என்றார்.

இளவரசி ஐரீனி ஆன்ம வாழ்வில் கண்டு வரும் முன்னேற்றம் குறித்து ஆசாரியாள் வினவினார்.

இளவரசி சொன்னார்: ''சங்கீதத்தைப் பயிலுவதில் என்னால் தெய்வத்துடன் தொடர்பு கொள்ள வழி காண முடிகிறது. இப்பாதையை நான் பின்தொடரலாமா?''

சங்கீதப் பற்றின் மூலம் உள்ளுறையும் உயிரைப் பற்றிய உணர்வை வளர்த்துக் கொள்வதற்கு சுவாமிகள் போதனையும் யோசனையும் கூறினார். 'சங்கீத அப்பியாசமும் தியானமும் கைகோத்துச் செல்லலாம். ஒன்று மற்றதற்கு உதவும்' என்றார்.

தியான மார்க்கத்தில் முன்னேறுகையில் ஏற்படுகிற சில பௌதிக — அதீதமான விஷயங்கள் பற்றி ஃப்ரெடரிகா அரசியார் கேட்டார். அதற்கு சுவாமிகள், ''இவற்றுக்கு யாரும் அதிக முக்கியத்துவம் தரலாகாது. ஞான ஒளி பெறுவதொன்றே தியானத்தின் இலட்சியம் என்பதை மறக்கலாகாது'' என்றார்.

'உயிர் பிரிகிற தருணத்தில் ஒருவர் உத்தம உணர்வுகளைப் பற்றிக் கொண்டிருக்க என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்கப்பட்ட போது சுவாமிகள், பகவந் நாமங்களை உச்சரித்தவாறே, புனித கிரந்தங்களைப் பாராயணம் செய்தவாறே, பிராணாயாமம் புரிந்தவாறே, பிரணவத்தை மொழிந்தவாறே நல்ல அறிவுடன் அமைதியாக உயிர் துறந்த ஒரு சிலரை உதாரணம் காட்டினார். தொடர்ந்து மொழிந்தார்:

''கவனத்துக்குரியது யாதெனில், எப்படி உயிர் விடுகிறோம் என்பதல்ல; எப்படி உயிர் வாழ்கிறோம் என்பதே. இப்போதே நாம் முடிந்த மட்டில் தெய்விக வாழ்வு நடத்த வேண்டும் என்பதில் ஒவ்வொருவரும் பிரயாசைப்பட வேண்டும். இறுதித் தருணத்தில் எந்த நிலையில் இருப்போம் என்பது பற்றி இப்போது சிரமப்படுத்திக் கொள்ள வேண்டியதில்லை. ஒருவர் மரணமடையும் போதுள்ள பௌதிக நிலை முக்கியமானதல்ல. ஒருவருக்குக் கடைசி வரை நினைவு இருக்கலாம்; இன்னொருவர் பிரக்ஞை யிழந்த நிலையில் காலமாகலாம். ஒருவர் அமைதியாகப் பிராணனை விடலாம்; வேறொருவர் மகத்தான அவஸ்தைப்பட்டு உயிர் விடலாம். இவற்றில் எல்லாம் அதிகம் பொருள் இல்லை. நாம் ஜாக்கிரதை செய்து கொள்ள வேண்டியது நிகழ்காலத்தைப் பற்றித்தான். வாழ்கிற போதே தியானம் முதலியவற்றைக் கைக் கொண்டால் போதும். அதோடு பூரண நினைவுடன் அமைதியாகக் காலமாக வேண்டும் என்று விரும்பினால் பிராணாயாமத்தையும், யோகத்தின் பிற அங்கங்களையும் மேற்கொள்ள வேண்டும். ஆனால் இது அவசியமே இல்லை. ஒருவரின் ஆன்மிக வாழ்வுக்கு இதனால் பெரிய லாபம் எதுவுமில்லை.''

புலால் உண்ணுமை பற்றி வினவினார் ராஜ மாதா: ''தாவர உணவை மட்டும் உண்ணும் எங்களில் சிலரிடம் மேற்கத்திய நண்பர்கள் இதற்குக் காரணம் காட்டச் சொல்கின்றனர். எந்த ஜீவனுக்கும் துன்பம் உண்டாக்கக் கூடாது என்பதே காரணம் என்று நாங்கள் கூறினால், தாவர வர்க்கத்துக்கு மட்டும் துன்பம் உண்டாகவில்லையா என்று திருப்பிக் கேட்கிறார்கள். இந்தத் தர்மசங்கடத்தில் என்ன பதில் சொல்வது?''

சுவாமிகள் தெளிவாகவும் விரிவாகவும், தாவர உணவுப் பழக்கத்தின் அடிப்படையை விளக்கினார்: ''பூரண தயையும், பூரண அஹிம்சையும் காட்டுகிற ஆதரிச வாழ்வு வெகு வெகு சிலருக்கே சாத்தியமானது. அப்படிப்பட்ட வாழ்வில், மரம் செடி கொடிகளிலிருந்து தானாக விழுகிற கனிகளையும் இலைகளையுமே புசிக்க வேண்டும். மற்றவர்கள் அந்த ஆதரிச நிலைக்கு எவ்வளவு அருகில் செல்லலாமோ அவ்வளவுக்குப் படிப்படியாகச் செல்வதே சாத்தியம். ஒருவர் உயிர் வாழ்வதற்குப் பிற உயிர்களைக் குறைந்தபட்சம் எவ்வளவு இம்சிக்கலாமோ, அதைவிட அதிகமாக இம்சிக்கக் கூடாது என்பதே விதி. இந்தக் கொள்கையின் அடிப்படையிலேயே புலால் உண்பதைக் காட்டிலும் தாவர உணவு மிகவும் சிலாக்கியமாகக் கொள்ளத்தக்கது. முதலிடத்து, காய்கறிகளைப் பறிக்கும்போது நாம் செடிகளை அடியோடு கொன்று விடுவதில்லை. ஆனால் ஒரு மிருகத்தைக் கொல்லாமல் அதன்



இளவரசி டோரதியா, இளவரசி ஐரீனி, அரசி ஃப்ரெடரிகா, இளவரசர் கார்ல், டாக்டர் மகாதேவன்

மாமிசத்தைப் பெற முடியாது. இரண்டாவதாக, தாவரங்களைவிட மிருகங்கள் நுண்ணுணர்வு வாய்ந்தவை. அவற்றுக்குத் தாவரங்களைக் காட்டிலும் உணர்வுப் பொறிகள் அதிகம்; அப்பொறிகள் அதிக நிட்சண்யம் பெற்றவையும் ஆகும். இவ் விஷயத்தில் மானுடர்களாகிய நமக்கும் மிருகங்களுக்கும் இடையில் அதிக வித்தியாசம் இல்லை எனலாம். நம்மிரு இனத்துக்கும், வலி என்ற உணர்ச்சி ஒன்று போன்றதே. வலியால் நம்மிரு இனமும் படுகிற அவஸ்தை ஒரே அளவானது. இந்த அளவுக்குத் தாவரங்கள் வருந்துவதில்லை. நாம் நகத்தையும், முடியையும் வெட்டிக் கொள்வது போன்றதே — தாவரங்களுக்கு, அவற்றின் காய்கறிகளையும் இலைகளையும் பறிப்பது. மூன்றாவதாக, உள்ளூறப் பார்க்கும் போது, நரமாமிசம் புசிப்பதற்கும் மிருகங்களின் புலாலை உண்பதற்கும் இடையே ஏற்றத் தாழ்வு இல்லை. நரமாமிசபட்சணத்தை ஆட்சேபித்துச் சொல்வதெல்லாம் மிருக மாமிசம் உண்பதற்கும் செல்லுபடியாகும். புலால் உண்ணும் நாகரிக மக்கள் நரமாமிச போஜனத்தை ஆட்சேபிக்கிறார்கள் எனில், இதற்குக் காரணம் வெறும் உணர்ச்சியே. வழக்கமான புலாலுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டதால், முதல் உலக யுத்த காலத்தில் ஜெர்மானியர்கள் குதிரை மாமிசம் உண்டனர். இதற்காக அவர்களை ஆங்கிலேயர் பரிகசித்தனர். இதற்கு வெற்று உணர்ச்சி தவிர வேறு காரணம் இல்லை.

''ஆகமொத்தத்தில், தாவரங்களை உண்டு வாழ்வதைவிடப் புலால் உணவினால் அதிக இம்சை ஏற்படுகிறது. உயிர் குலத்தின் இன்னலைக் குறைக்க உதவும் எந்த முயற்சியும் போற்றுதலுக்குரியது.''

கிரீஸ் ராஜ குடும்பத்தில் ஒருவர், ''கடந்த இரண்டாம் யுத்த முடிவில் மனித குலம் ஆன்ம சம்பத்தை நோக்கித் திரும்புகிற வாய்ப்பு இருந்தது. அதை உலகம் நழுவ விட்டுவிட்டது அல்லவா?'' என்ற சந்தேகத்தை எழுப்பினர்.

''மனித குலம் முழுவதையும் தழுவுகிற விதத்தில் இவ்வாறு பொதுப்படையாகச் சொல்வதற்கில்லை'' என்று கூறிய சுவாமிகள் தொடர்ந்து, ''தனி நபர்களைக் கவனிப்பதே முக்கியம். தனிமனிதர்கள் அகமுன்னேற்றம் பெறுவதில் அக்கறை கொள்வதே முக்கியம். தனிமனிதர் ஒவ்வொருவரும் ஆன்மிக வாழ்வில் பரிணமித்தால் உலகம் தானாகவே முன்னேறும். 'தான் பெரியவனாக வேண்டும்' என்பது ஒருவனது இலட்சியமாக இருக்கக் கூடாது; 'தான் நல்லவனாக வேண்டும்' என்பதே இலட்சியமாக இருக்க வேண்டும். நல்லவனாக இருப்பதுதான் உண்மையில் பெரியவனாக இருப்பதாகும்'' என்றார்.

டிஸம்பர் 8ந் தேதி, சுவாமிகளிடம் விடைபெறுமுன் அரசியாரும், மற்றவர்களும் அவரது அருள் வழியும் சந்நிதியில் அரை மணி நேரம் அமர்ந்திருந்தனர். யாரும் எதுவும் பேசவில்லை. தமக்கே உரிய முறையில், மகாகுரு அந்த ராஜ குடும்பப் பக்தர்களை ஆசீர்வதித்தார். பிரியவே மனமில்லாதவர்களாக, அவர்கள் தங்களைத் தாங்களே அப்பால் இழுத்துக் கொண்டு சென்றனர்.

மதுரைப் பட்டணத்தில் விசேஷ ரயில் பெட்டியில் மேதகு அரசியாரிடம் நகர சபைத் தலைவர், சபையின் வரவேற்பை ஏற்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். அதற்கு ராஜமாதா கூறிய விடையில் அவர்களுடைய எளிமைப் பண்பும், ஆத்மிகச் செல்வத்தில் அவர்களுக்கிருந்த ஆழ்ந்த நாட்டமும் புலப்பட்டது. அவர் சொன்னார்:

> ''மெத்த நன்றி. ஆனால் நாங்கள் ஐரோப்பாவிலிருந்து இவ்வளவு தொலைவு வந்திருப்பது ராஜ குடும்ப அங்கத்தினர் என்ற முறையில் அல்ல. புனித சுவாமிகளின் ஆசியையும், வழித் துணையையும் நாடும் எளிய பக்தர்களாகவே இங்கு வந்திருக்கிறோம்.''



[தேச பிதாவின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் நேரத்தில் அன்னை கஸ்தூரி பாவின் நூற்றாண்டு விழாவையும் கொண்டாடும் பெரும் பாக்கியம் நமக்குக் கிட்டியிருக்கிறது. அன்னையைப் பற்றிய சில நினைவுகளை இங்கு தருகிறார் மருமகள்.]

# தந்தையும் தாயும்

## லக்ஷ்மி தேவதாஸ் காந்தி

**'பா'** என்று எல்லோராலும் அழைக்கப்படும் கஸ்தூரி பா அன்னையும், பாபுஜியும் ஒரே ஆண்டில் பிறந்தார்கள். ஆகையால்தான் பாபுவின் நூற்றாண்டு விழாவையும் பாவின் நூற்றாண்டு விழாவையும் இவ்வருஷம் சேர்ந்தே கொண்டாடுகிறோம். தவிர இவ்வருஷம் சிவராத்திரியன்று 'பா' வின் இருபத்தைந்தாவது மறைவு தினமும் வருகிறது. தமது எழுபத்தி ஐந்தாவது வயதில் கணவருடன் சிறைவாசம் செய்த போது நோய்வாய்ப்பட்டுச் சிறையிலேயே சிவராத்திரியன்று 'பா' பரலோகமடைந்தார்.

நூறு ஆண்டுகளுக்கு முன்பு பிறந்த 'பா' பழைய காலத்தவராகத்தான் இருந்தார்! கணவருக்குப் பணிவிடைகள் செய்வதையே முதல் கடமையாக எண்ணி வந்தார். அட்டகாசமாகச் சிரித்து உரக்கப் பேசும் பழக்கம் அவரிடம் இருக்கவில்லை. கடவுளிடமும் பாவ புண்ணியங்களிலும் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார். சோமவார விரதமும் ஏகாதசி விரதமும் அந்தக் காலத்து எல்லாக் குஜராத்தி ஹிந்துப் பெண்களும் அனுஷ்டித்தார்கள். 'பா'வும் இவ்விரதங்களைக் கடைசிக் காலம் வரை நோற்றார்கள். கோகுலாஷ்டமி யன்றும் ஸ்ரீராமநவமி யன்றும் அநேகமாக முழுப் பட்டினிதான்.

'பா' எழுதப் படிக்கத் தெரியாதவர் என்று நினைப்பது தவறு. தினமும் பத்திரிகைகளை யார் மூலமாவது படிக்கச் சொல்லி விஷயங்கள் தெரிந்து கொள்வார். அவருடைய சொந்த வாழ்க்கைக்கும் அரசியலுக்கும் மிக்க



'பா' ஒவ்வோர் ஆண்டும் எங்கள் குடும்பத்தோடு தில்லியில் ஒரு மாதம் வந்து தங்குவார். ஒவ்வொரு தினமும் பாபுவிடமிருந்து கடிதம் வந்தாக வேண்டும். பாபுவுக்கு நாங்களும் கடிதம் போட்டாக வேண்டும். தினமும் எழுதுவதற்கு விஷயம் இல்லையே என்று சொன்னோமானால் அவருக்குச் சமாதானமாகவே இருக்காது.

'பா'வைப் பற்றி முக்கியமாகச் சொல்ல வேண்டிய விஷயம் அவர் தம்மைப் பற்றியே சொல்லிக் கொள்ளாமல் இருந்ததுதான். தாம் செய்த ஜபதபங்களைப் பற்றியோ, மற்றவர்களுக்குச் செய்த உடல், பொருள் உதவியைப் பற்றியோ 'பா' ஆடம்பரமாகப் பேசி நாங்கள் கேட்டதேயில்லை. அவர் வாழ்க்கையில் அநுபவித்த கஷ்டங்கள் மிக மிக உண்டு. ஆனால் அவர் அதைப் பற்றிக் குறை கூறியதே யில்லை. பாபுஜியுடன் நன்றாகப் பேசி, எந்த





நெருங்கிய தொடர்பு இருந்தபடியால் அரசியல் அவருக்கு வெகு நன்றாகத் தெரிந்திருந்தது. பாபுஜியுடன் நெருங்கிப் பழகி அவர் குடும்பத்துடன் ஒன்றாகச் சேர்ந்து வசிக்கப் பல நாட்டாரும் பல சமயத்தினரும் அவ்வப்போது வருவது உண்டு. விருந்தினர்களுக்கு அன்புடனும் பரிவுடனும் 'பா' உணவு சமைத்துப் பரிமாறுவார்.

பாபுவைப் போலவே 'பா'வும் மிகவும் கண்டிப்பானவராகத்தான் இருந்தார். அவரிடம் நான்கே புடவைகள்தான் இருக்கும். அவற்றை வெகு சுத்தமாகத் துவைத்து வெகு அழகாகவும் உடுத்துவார். தலையையும் வெகு சீராக வாரிக் குஜராத்தி மாதர்கள் பாணியில் கொண்டை போட்டுக் கொள்ளுவார். உணவை ரசித்துச் சாப்பிடுவார்.

விஷயமானாலும் தமக்குச் சரி என்று தோன்றும்வரை சுலபத்தில் ஒப்புக் கொள்ள மாட்டார். பதற்றமும் கோபமும் இல்லாமல் தெளிவுடன் விவாதம் செய்யும் ஆற்றல் அவரிடம் இருந்தது.

பாபுஜியின் ஒவ்வொரு முயற்சியிலும் போராட்டத்திலும் 'பா' பங்கு எடுத்துக் கொண்டார். பாபுஜி உபவாசம் இருந்த போதெல்லாம் தாமும் சாப்பாட்டை நிறுத்திப் பலகாரம்தான் எடுத்துக் கொள்ளுவார். படுத்த படுக்கையாக இருக்க நேரும் வரையில் தம் கையாலேயேதான் பாபுஜிக்கு உணவு சமைத்தார்.

பாவின் மறைவுக்குப் பிறகு கொஞ்ச நாள் பாபுஜியைப் பார்க்கும்போதெல்லாம் எங்களுக்குத் தாயை இழந்த குழந்தையைப் பார்ப்பதுபோல் தோன்றிற்று!




# அண்ணாவுக்கு அஞ்சலி

பிப்ரவரி 16-ந் தேதி அறிஞர் அண்ணாதுரையின் நினைவு நாளையொட்டி இவ்விதழ் கல்கி வெளியாகிறது. அண்ணாவின் நினைவைப் போற்றி அஞ்சலி செலுத்தி இந்தப் புகைப்பட அநுபந்தத்தை நேயர்களுக்கு அளிக்கிறோம்.

1. முதல்அமைச்சர் அண்ணாதுரை சென்னை ராஜ்யம் என்றிருந்ததைத் தமிழ்நாடு என்று மாற்றியமைத்த தினத்தன்று பேசுகிறார். 2. அறிஞர் அண்ணாவுக்கு யானை மாலைசூட்டி மகிழ்கிறது. 3. அமெரிக்கா சென்று தமிழகத்தின் பெருமையை நிலைநாட்டினார் அண்ணா.





# தலைவர்களுடன் தமிழக முதல்வர்



ராஷ்டிரபதியுடன் நடக்கிருர்



கவர்னரின் கரம் குலுக்குகிருர்



தமிழ் மகாநாட்டின்போது ராஜாஜியுடன்



காமராஜருடன் அளவளாவுகிருர்



இஸ்மாயில்
அவர்களுடன்
வீற்றிருக்கிருர்

தற்காலிக முதல்
அமைச்சராயிருந்த
நெடுஞ்செழியனும்
அண்ணுவும்





பொதுப்பணித்துறை
அமைச்சரும்
(இன்றைய முதல்வர்)
முதல்வரும்

தமிழ்நாடு பெயர்
மாற்றத்துக்குப்
போராடியவரும்
அதற்குச் செயலுருவம்
அளித்தவரும்





எழுத்தாளர்



கலைஞர்



சிந்தனையாளர்



முதன்மந்திரி



குடும்பத் தலைவர்

## அண்ணா — பலகோணங்களில்

மழலை இன்பம்



நூலின் இன்பம்











- ☐ அண்ணாவைப் பேட்டி காண்பதென்றால் பத்திரிகை நிருபர்களுக்கு ஒரே ஆனந்தம்தான்.
- ☐ பட்டதாரி அண்ணா.
- ☐ தேர்தல் பிரசாரத்தின் போது மங்களத் திலகம் இடுகிறார் ஒரு சகோதரி.
- ☐ படி அரிசித் திட்டம் அமுலாகிறது
- ☐ நிர்வாக இயந்திரத்தை இயக்கியவர் கார் இயந்திரத்தையும் இயக்குகிறார்.
- ☐ வணக்கத்துக்குரியவர் வணக்கம் கூறுகிறார்.









மக்களின் நல்வாழ்வுக்கு ஓயாது ஒழியாது உழைத்த அண்ணு இவ்வுலகிலிருந்து பிரிந்து மக்களைத் துயரக் கடலில் ஆழ்த்தி விட்டார்.

கணவர் பிரிந்த துயர் தாளாது அழுது அரற்றித் துடிக்கும் அண்ணியின் துயரை யாரே ஆற்றவல்லார்?



இந்திய சர்க்கார் உள்துறை மந்திரி சாவன் மலர் வளையம் வைத்து மரியாதை செலுத்துகிறார்.



அண்ணுவின் இறுதிச் சடங்கின்போது ராணுவ மரியாதை நடைபெறுகிறது.

அண்ணா அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் துயரே வடிவாக அமர்ந்திருப்பவர்கள், சி. சுப்பிரமணியம், நம்பூதிரிப்பாடு, உஜ்ஜல்சிங், சாவன் முதலியோர்.

இறுதி யாத்திரை ஊர்வலத்தில் லட்சோபலட்சம் மக்கள்.

புகைப்படங்கள் : ஏ. சுந்தரம்

# உங்களுக்கே... பருவ மங்கையின் பைந்தளிர் மேனியெழில்.

இளமை கொஞ்சிப் புதுமெருகு மிளிரும் எழிலுக்கே... ஜேய் அழகு சோப்! சரும நெகிழ்ச்சிக்கான எண்ணெய்கள் கொழித்திட, ஆழ ஊடுருவிச் சுத்தமிடும் அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. விலை உள்ளளவும் எல்லை மீறிய செழிப்புடன் கமழும் அதன் மல்லிகை மணம் உங்களைக் கொள்ளைகொள்ளும். மறவாதீர்கள், நவீனமான உலோக ஜிகினாத் தாளுறை தரித்தது ஜேய் ஒன்றுதான்.

ஜேய்—நீங்கள் நினைப்பதை விடக் குறைவான விலை உள்ள அதி விசேஷ 'அழகுசாதன சோப்!

உங்கள் எழில் பெருக

## ஜேய்

அழகு சோப்

உங்கள் மனங்கவர் மணங்கமழ்வது.




**டாடா**
தயாரிப்பு

Bensons13170 TM

# பொன்னியின்

## இரண்டாம் அத்தியாயம்

## சேற்றுப் பள்ளம்

**கா**ட்டிலும் மேட்டிலும் கல்லிலும் முள்ளிலும் அந்தப் பெண்ணைத் தொடர்ந்து வந்தியத்தேவன் ஓடினான். ஒரு சமயம் அவன் கண்ணுக்குத் தெரிந்தாள். மறு கணத்தில் மறைந்தாள். இனி அவளைப் பிடிக்க முடியாது என்று தோன்றிய போது மறுபடியும் கண்ணுக்குப் புலப்பட்டாள். மாய மாரீசனைத் தொடர்ந்து 'ராமர் சென்ற கதை வந்தியத்தேவனுக்கு நினைவு வந்தது. ஆனால் இவள் மாயமும் அல்ல; மாரீசனும் அல்ல. இவளுடைய கால்களிலே மானின் வேகம் இருக்கிறது என்பது மட்டும் நிச்சயம்! அம்மம்மா! என்ன விரைவாக ஓடுகிறாள்! 'எதற்காக இவளைத் தொடர்ந்து ஓடுகிறோம்? இது என்ன பைத்தியக்காரத்தனம்?' என்று எண்ணினான். உடனே அதற்கு ஒரு காரணமும் கற்பித்



தூர் கொண்டான். கோடிக்கரை நெருங்க நெருங்கச் தன் அமுதன் வர்ணித்த மங்கையி நினைவு அவனுக்கு அடிக்கடி வந்து கொண்டிருந்தது. இவள் அந்தப் பூங்குழலியாகத்தான் இருக்க வேண்டும். இவளுடன் சிநேகம் செய்து கொண்டால் வந்த காரியம் நிறை வேறுவதற்கு அநுகூலமா யிருக்கும். அத்துடன் கலங்கரை விளக்கத்துக்குப் போக வழி கேட்டும் தெரிந்து கொள்ள லாம். தொலைதூரத்தில் வரும்போதே அவர்களுக்குக் கலங்கரை விளக்கின் உச்சி தெரிந்தது. ஆனால் அதை நெருங்குவது எளிதாயில்லை. காட்டுக் குள் புகுந்ததும் கலங்கரை விளக்குத் தெரியவேயில்லை. காட்டுக்குள்ளே சுற் றிச் சுற்றி வருவதாக ஏற்பட்டதே தவிர வழி அகப்படவில்லை. இந்தச் சமயத் திலேதான் குழகர் கோயிலின் மதிள் சுவரின்மேல் பூங்குழலியை வந்தியத் தேவன் கண்டான். அவளைப் பிடித்து வழி கேட்கலாம் என்று பார்த்தால், அவள் இப்படி மாய மானைப் போல் பிடிபடாமல் ஓடுகிறாளே? இவளை இப் படியே விட்டு விட்டுத் திரும்பவேண்டி யதுதான்! ஆனால் ஓட்டப் பந்தயத் திலே கூட ஒரு பெண் ணுக்குத் தோற்பது என் றால் அதுவும் மனத் துக்கு உகந்ததாயில்லை...

ஆ! அதோ திறந்த வெளி வந்து விட்டது.



சற்றுத் தூரத்தில் நீலக்கடல் தெரிகிறது. விரிந்து பரந்து அமைதி குடிகொண்ட அந்தக் கடலின் தோற்றம் என்ன அழகாக இருக்கிறது! அதோ கலங்கரை விளக்கமும் தெரிகிறது. அதன் உச்சியில் இப்போது ஜோதி கொழுந்து விட்டு எரிகிறது. அதன் செந்நிறக் கதிர்கள் நாலா பக்கமும் பரவி விழுந்து விசித்திர ஜாலவித்தைகள் புரிகின்றன.

இந்த இடத்தில் இந்தப் பெண்ணைப் பின்தொடர்வதை விட்டு விட்டுக் கலங்கரை விளக்கை நோக்கிப் போகலாமா? கூடாது! கூடாது! இந்தத் திறந்த வெளியில் இவளை ஓடிப் பிடிப்பது சுலபம். இங்கே இவ்வளவு மணலாகக் கூட இல்லை. கால் மணலில் புதையவில்லை. பூமியில் புல் முளைத்துக் கெட்டிப்பட்டிருக்கிறது. சில இடங்களில் சேறு காய்ந்து பொறுக்குப் படர்ந்திருக்கிறது. இங்கே யெல்லாம் தடங்கலின்றி ஓடலாம். அந்தப் பெண்ணை இலகுவாய்ப் பிடித்துவிடலாம்! மேலும் மேலும் அவள் கடலை நோக்கி யல்லவா ஓடுகிறாள்? எவ்வளவு ஓடினாலும் முடிவில் கடலோரத்தில் சென்று அவள் நின்றுதானே ஆக வேண்டும்? ஒருவேளை இந்த விந்தையான பெண் கடலிலே முழுகி மறைந்து விடுவாளோ! அடடா! குதிரையிலேயே ஏறி வராமற் போனோமே! அப்படி வந்திருந்தால் இந்தத் திறந்த வெளியில் ஒரு நொடியில் இவளைப் பிடித்து விடலாமே?

அதோ அவள் சற்றுத் தயங்கி நிற்கிறாள். நேரே கடலை நோக்கி ஓடாமல் வலது பக்கமாகத் திரும்பி ஓடுகிறாள். தன்னிடம் பிடிபடாமல் இருப்பதற்காக வலதுபுறத்தில் சற்றுத் தூரத்தில் தென்பட்ட காட்டை நோக்கி ஓடுகிறாள். காட்டுக்குள் அவள் புகுந்து விட்டால் நிச்சயமாகப் பிடிக்க முடியாதுதான். இத்தனை நேரம் ஓடியதும் வீண்! வந்தியத் தேவனுடைய கால்களும் அச்சமயம் கெஞ்ச ஆரம்பித்தன. அவனுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க ஆரம்பித்து விட்டது...

மீண்டும் அவளுடைய மனத்தை மாற்றிக் கொண்டு விட்டாள் போலும்! காட்டுக்குள் போகும் எண்ணத்தை விட்டு விட்டாள் போலும்! பம்பரத்தைப்போல் ஒரு சுற்றுச் சுற்றித் திரும்பி ஓடி வருகிறாள். கலங்கரை விளக்கின் அடிக்குப் போக நினைத்தாள் போலும். ஒரு நாலு பாய்ச்சல் பாய்ந்தால் அவளைப் பிடித்துவிடலாம். கைப்பிடியாக அவளைப் பிடித்து, ''பெண்ணே! ஏன் இப்படி என்னைக் கண்டு மிரண்டு ஓடுகிறாய்? உனக்கு உன் காதலனிடமிருந்து செய்தி கொண்டு வந்திருக்கிறேன்!'' என்று சொன்னால், எத்தனை அதிசயம் அடைவாள்! சேந்தன் அமுதன் அவளிடம் ஒன்றும் சொல்லி அனுப்பவில்லை என்பது உண்மைதான். அதனால் என்ன? ஏதாவது சொந்தமாகக் கற்பனை செய்து சொன்னால் போகிறது!...

வந்தியத்தேவன் மனத்திற்குள் நிர்மானித்தபடி தன் தேகத்தில் மிச்சமிருந்த வலிமையை எல்லாம் உபயோகித்துப் பாய்ந்து ஓடினான். திரும்பி ஓடி வந்துகொண்டிருந்த அவளை நாலே பாய்ச்சலில் பிடித்து விடலாம் என்பது தான் அவனுடைய உத்தேசம். திடீரென்று ''ஐயோ!'' என்றான். தனக்கு என்ன நேர்ந்துவிட்டது என்பது முதலில் அவனுக்கே தெரியவில்லை. பிறகு புலப்படத் தொடங்கியது. அவனுடைய கால்கள் இரண்டும் சேற்றில் புதைந்து கொண்டிருந்தன. முதலில் பாதங்கள் மட்டும் புதைந்தன. பிறகு கணுக்கால் புதைந்தது. முழங்கால் வரையில் சேறு மேலேறி விட்டது!

அடாடா! இந்த இடம் நம்மை எப்படி ஏமாற்றி விட்டது? மேலே பார்த்தால் நன்றாய்க் காய்ந்து பொறுக்குத் தட்டி யிருக்கிறது. உள்ளே சேறு இன்னும் காயவில்லை. என்றுமே முழுமையும் காய முடியாத புதை சேற்றுக் குழிகளைப் பற்றி வந்தியத்தேவன் கேள்விப்பட்டதுண்டு. ஆடு மாடுகள், குதிரைகள், யானைகள் கூட அப் பள்ளங்களில் அகப்பட்டுக் கொண்டால் சிறிது சிறிதாக உள்ளே அமுங்கிக் கொண்டே போய்க் கடைசியில் முழுதுமே முழுகி மறைந்துவிடுமாம்! அத்தகைய புதைகுழிதானே இது! அப்படித்தான் தோன்றுகிறது. முழங்காலும் மறைந்து விட்டதே! மேலும் உள்ளே இறங்கிக் கொண்டே இருப்போமோ? விரைவில் தொடைவரைக்கும் புதைந்து விடும் போலிருக்கிறதே! யானைகளையும் குதிரைகளையும் விழுங்கி ஏப்பம் விடும் புதை சேறு நம்மைச் சும்மா விட்டு விடுமா? ஐயோ! இதுவா நமது முடிவு? நாம் கண்ட எத்தனை எத்தனையோ பகற் கனவுகள் எல்லாம் இதிலேயே புதைந்து விட வேண்டியது தானா? இந்த அபாய வேளையில் அந்த விசித்திரமான பெண் வந்து கைகொடுத்துக் காப்பாற்றினால்தான் உண்டு. தப்புவதற்கு வேறு வழி இல்லை. ஒரு பெருங் கூச்சல் போட்டுப் பார்க்கலாம். — இவ்விதம் எண்ணிய வந்தியத் தேவன், ''ஐயோ! நான் செத்தேன்! சேற்றில் மூழ்கிச் சாகிறேன். எனக்குக் கை

கொடுத்து உதவி செய்து காப்பாற்றுவார் யாரும் இல்லையா?'' என்று கத்தினான்.

அந்தக் கூக்குரல் பூங்குழலியின் காதில் விழுந்தது. அவனுக்கு நேர் எதிரே சற்றுத் தூரத்தில் ஓடிக் கொண்டிருந்த பூங்குழலி நின்றாள். ஒரு கணம் தயங்கினாள். வந்தியத் தேவனுடைய அபாயமான நிலையைப் பார்த்துத் தெரிந்து கொண்டாள்.

மறு கணம் அங்கே பாதி மணலிலும் பாதி சேற்றுக் குழியிலும் கிடந்த படகு ஒன்று அவள் கவனத்தைக் கவர்ந்தது. அக் குழியில் தண்ணீர் நிறைந்து ஆழமான நீரோடையாக இருந்த காலத்தில் அப்படகு உபயோகப்பட்டிருக்க வேண்டும். அதில் இப்போது லாகவமாகக் குதித்து ஏறினாள். துடுப்பை எடுத்து இரண்டு தடவை வலித்தாள். அடாடா! இது என்ன அதிசயம்! அந்தப் படகு நீரில் அன்னப் பறவை செல்வது போல் அல்லவா சேற்றின் மேலே விரைவாக மிதந்து செல்கிறது. மிதந்து சென்று புதைச் சேற்றுக் குழியின் அக்கரையையும் அடைந்து விட்டது! பூங்குழலி கெட்டித் தரையில் குதித்தாள். கரையில் கால்களை நன்றாய் ஊன்றிக் கொண்டு வந்தியத் தேவனுடைய கைகளைப் பற்றிக் கரையில் இழுத்து விட்டாள். அம்மம்மா! அந்த மெல்லியலாளின் கைகளிலேதான் எவ்வளவு வலிமை! தஞ்சைபுரிக் கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையருடைய இரும்புக் கைகளை விட இவளுடைய கரங்கள் அதிக உறுதியாக இருக்கின்றனவே!

கரை ஏறியதும் வந்தியத் தேவன் கலகலவென்று சிரித்தான். அவனுடைய கால்கள் மட்டும் கொஞ்சம் நடுங்கிக் கொண்டிருந்தன.

''என்னைக் காப்பாற்றிக் கரை சேர்த்துவிட்டதாக உனக்கு எண்ணம் போலிருக்கிறது! நீ வந்திராவிட்டால் நான் கரையேறி யிருக்க மாட்டேன் என்று நினைத்தாயோ?'' என்றான்.

''பின் எதற்காக அப்படி 'ஐயோ! ஐயோ!' என்று கத்தினாய்?'' என்று பூங்குழலி கேட்டாள்.

''உன்னை ஓடாமல் தடுத்து நிறுத்துவதற்காகத்தான்!''

''அப்படியானால் மறுபடியும் உன்னைக் குழியிலே தள்ளி விடுகிறேன். உன் சாமர்த்தியத்தினால் நீயே கரை ஏறிக்கொள்!'' என்று பூங்குழலி சொல்லித் தள்ள யத்தனித்தாள்.

''ஐயையோ!'' என்று வந்தியத் தேவன் விலகி நின்று கொண்டான்.

''எதற்காக அலறுகிறாய்?''

''உயிருக்காகப் பயப்படவில்லை; சேற்றுக்காகத்தான் பயப்படுகிறேன்! ஏற்கனவே தொடை வரைக்கும் சேறாகி விட்டது!''

பூங்குழலியின் முகத்தில் புன்னகை மலர்ந்தது. வந்தியத் தேவனை ஏற இறங்கப் பார்த்தாள்.

''அதோ கடல் இருக்கிறது. போய்ச் சேற்றை அலம்பிச் சுத்தம் செய்து கொள்!'' என்றாள்.

''நீ கொஞ்சம் முன்னால் சென்று வழி காட்ட வேண்டும்!'' என்றான் வந்தியத் தேவன்.

இருவரும் கடற் கரையை நோக்கி நடந்தார்கள். சேற்றுப் பள்ளத்தைச் சுற்றிக் கொண்டு சென்றார்கள்.

''என்னைக் கண்டதும் எதற்காக அப்படி விழுந்தடித்து ஓடினாய்? என்னைப் பயங்கரப் பேய் பிசாசு என்று எண்ணி விட்டாயா?'' என்று வல்லவரையன் கேட்டான்.

''இல்லை; பேய் பிசாசு என்று எண்ணவில்லை. ஆந்தை என்று எண்ணினேன். உன் மூஞ்சி ஆந்தை மூஞ்சி மாதிரியே யிருக்கிறது!'' என்று கூறிவிட்டுச் சிரித்தாள்.

வந்தியத் தேவனுக்குத் தன் தோற்றத்தைக் குறித்துக் கர்வம் அதிகம். ஆகையால் அவனை ஆந்தை மூஞ்சி என்று சொன்னது அவனுக்கு மிக்க கோபத்தை உண்டாக்கிற்று.

''உன்னுடைய குரங்கு முகத்துக்கு என்னுடைய ஆந்தை முகம் கெட்டு விட்டதாக்கும்!'' என்று முணு முணுத்தான்.

''என்ன சொன்னாய்?''

''ஒன்றுமில்லை. என்னைக் கண்டு எதற்காக அப்படி ஓடினாய் என்று கேட்டேன்.''

''நீ எதற்காக அப்படி என்னைத் துரத்திக் கொண்டு வந்தாய்?''

''கலங்கரை விளக்கத்துக்கு வழி கேட்பதற்காக உன்னைத் துரத்திக் கொண்டு வந்தேன்...''

''அதோ தெரிகிறதே விளக்கு! என்னை வழி கேட்பானேன்?''

''காட்டுக்குள் புகுந்த பிறகு தெரியவில்லை. அதனாலேதான்! நீ எதற்காக என்னைக் கண்டதும் அப்படி ஓட்டம் பிடித்தாய்?''

''ஆண் பிள்ளைகள் மிகப் பொல்லாதவர்கள். ஆண்பிள்ளைகளைக் கண்டாலே எனக்குப் பிடிப்பதில்லை.''

''சேந்தன் அமுதனைக் கூடவா?'' என்றான் வல்லவரையன் கொஞ்சம் மெல்லிய குரலில்.

''யாரைச் சொன்னாய்?''

''தஞ்சாவூர் சேந்தன் அமுதனைச் சொன்னேன்.''

''அவனைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?''

''அவன் உன் அருமைக் காதலன் என்று தெரியும்.''

''என்ன? என்ன?''

''உன் பெயர் பூங்குழலிதானே?''

''என் பெயர் பூங்குழலிதான். சேந்தன் அமுதனைப் பற்றி என்ன சொன்னாய்? அவன் என்....''

''அவன் உன் காதலன் என்றேன்.''

பூங்குழலி கலீர் என்று நகைத்தாள். ''அப்படி யார் உனக்குச் சொன்னது?'' என்றாள்.

''வேறு யார் சொல்வார்கள்? சேந்தன் அமுதன்தான் சொன்னான்.''

''தஞ்சாவூர் வெகு தூரத்தில் இருக்கிறது. அதனாலேதான் அப்படிச் சொல்லித் தப்பித்துக் கொண்டான்!''

''இல்லாவிட்டால்....?''

''இங்கே என் முன்னால் சொல்லியிருந்தால் அந்தச் சேற்றுக் குழியில் தூக்கிப் போட்டிருப்பேன்.''

''அதனால் என்ன? சேற்றை அலம்பிக்கொள்ளக் கடலில் ஏராளமாய்த் தண்ணீர் இருக்கிறதே?''

''நீ விழுந்த புதை சேற்றுக் குழியில் மாடு, குதிரை எல்லாம் மூழ்கிச் செத்திருக்கின்றன. யானையைக் கூட அது விழுங்கிவிடும்!''

வந்தியத் தேவனுடைய உடம்பு சிலிர்த்தது. அவனை அந்தப் படுகுழி கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே இழுத்துக்கொண்டிருந்த போது ஏற்பட்ட உணர்ச்சியை நினைத்துக் கொண்டான். இவள் மட்டும் வந்து கரை ஏற்றி விடாவிட்டால், இத்தனை நேரம்...அதை நினைத்த போது அவன் உடம்பெல்லாம் நடுங்கிற்று.

''சேந்தன் அமுதன் என்னைப் பற்றி இன்னும் என்ன சொன்னான்?'' என்று பூங்குழலி கேட்டாள்.

''நீ அவனுடைய மாமன் மகள் என்று சொன்னான். உன்னைப் போன்ற அழகி தேவலோகத்தில் கூடக் கிடையாது என்று சொன்னான்....''

''தேவலோகத்துக்கு அவன் நேரில் போய்ப் பார்த்திருப்பான் போலிருக்கிறது. இன்னும்?...''

''நீ நன்றாகப் பாடுவாய் என்று சொன்னான். நீ பாடினால் கடலும் கூட இரைச்சல் போடுவதை நிறுத்தி விட்டுப் பாட்டைக் கேட்குமாம். அது உண்மைதானா?''

''நீயே அதைத் தெரிந்து கொள்! இதோ கடலும் வந்து விட்டது!...''

இருவரும் கடற்கரை யோரமாக வந்து நின்றார்கள்.

## அத்தியாயம் மூன்று

# சித்தப்பிரமை

**வா**னத்தில் விண் மீன்கள் கண்ணைச் சிமிட்டிக்கொண்டிருந்தன. பிறைச் சந்திரன் நீலக் கடலில் மிதக்கும் வெள்ளி ஓடத்தைப் போலப் பவனி வந்து கொண்டிருந்தான்.

காற்றின் வேகம் அதிகமாகியிருந்தது. கடல் குமுறியது. வெள்ளைக் கைகளை நீட்டிக் கரையில் நின்றவர்களைத் தன்பால் இழுக்க முயன்றது.

''ஏன் நிற்கிறாய்? சீக்கிரம் சேற்றைக் கழுவிக் கொள்! வீட்டுக்கு உடனே போக வேண்டும். இல்லாவிட்டால் இன்று எனக்குச் சோறு கிடைக்காது. அண்ணி சோற்றுப் பானையைக் கவிழ்த்து விடுவாள்!'' என்றாள் பூங்குழலி.

''இங்கு கடலின் ஆழம் அதிகமா?'' என்று வந்தியத் தேவன் கேட்டான்.

''உன்னைப் போல் பயங்கொள்ளியை நான் பார்த்ததே யில்லை. இங்கே வெகு தூரத்துக்கு ஆழமே கிடையாது.



அரைக்காத தூரம் கடலில் போனு லும் இடுப்பளவு தண்ணீர்தான் இருக் கும். ஆகையினுலேதான் ஒவ்வொரு நாள் இரவும் கலங்கரை விளக்கு எரிய வேண்டி யிருக்கிறது!''

வந்தியத்தேவன் தயங்கித் தயங்கித் தண்ணீரில் இறங்கினுன். சேற்றைக் கழுவிக் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டு கரை ஏறினுன்.

சற்றுத் தூரத்தில் வைத்தியருடைய மகன் குதிரை மேலேறி வருவதைக் கண்டான். வந்தியத் தேவனுடைய குதிரையும் பக்கத்தில் வந்தது.

''ஐயையோ! குதிரை சேற்றில் இறங்கிவிடப் போகிறதே!'' என்ருன் வந்தியத் தேவன்.

''இறங்காது. மனிதர்களை விடக் குதிரைகளுக்கு விவேகம் அதிகம்!'' என்ருள் பூங்குழலி.

''ஆனுல் ஒரு குதிரையின் பேரில் மனிதன் இருக்கிருனே? அவன் என் குதிரையையும் பிடித்து இழுத்துக் கொண்டு வருகிருனே!''

''அது கொஞ்சம் அபாயம்தான்! ஓடிப் போய் எச்சரிக்கை செய்!''

''நில்லு! நில்லு!'' என்று கூச்ச லிட்டுக் கொண்டே வந்தியத் தேவன் ஓடிப் போய்த் தடுத்து நிறுத்தினுன்.

பூங்குழலியும் சற்று நேரத்துக்கெல் லாம் அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டாள்.

மூவரும் கலங்கரை விளக்கத்தை நோக்கி நடந்தார்கள்.

''நீ குதிரையில் ஏறிக் கொள்ள லாமே?'' என்ருள் பூங்குழலி.

''இல்லை; உன்னுடன் நடந்தே வரு கிறேன்.''

பூங்குழலி குதிரையின் அருகிற் சென்று அதன் முகத்தைத் தடவிக் கொடுத்தாள். அதனுல் மகிழ்ச்சி அடைந்ததைப் போல் குதிரை உடம் பைச் சிலிர்த்துக் கொண்டு சற்று இலேசாகக் கனைத்தது.

''உன்னை என் குதிரைக்குப் பிடித்து விட்டது! இது மிக நல்லது.''

''என்ன விதத்தில் நல்லது?''

''நான் இலங்கைக்குப் போக வேண் டும். இந்தக் குதிரையை உன்னிடம் ஒப்புவித்துவிட்டுப் போகலாம் என்று எண்ணுகிறேன். பார்த்துக் கொள் கிருயா?''

''ஓ! பார்த்துக் கொள்கிறேன். எல்லா மிருகங்களும் சீக்கிரம் என்னி டம் சிநேகமாகி விடும். மனிதர்களுக்கு மட்டுந்தான் என்னைக் கண்டால் பிடிக் காது....''

''ஏன் அப்படிச் சொல்லுகிருய்? சேந் தன் அமுதன் உன் பேரில்...''

''எனக்கும் மிருகங்களின் பேரில் தான் பிரியம்; மனிதர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்காது!''



''மனிதர்கள் அப்படி என்ன உனக்குச் செய்து விட்டார்கள்?''

''மனிதர்கள் பொல்லா தவர்கள். பொய்யும் புனை சுருட்டுமே அவர்களுக்கு வேலை!....''

''எல்லாரையும் சேர்த்து அப்படிச் சொல்லி விடக் கூடாது. சேந்தன் அமுதன் நல்லவன். இதோ வருகி ருனே, வைத்தியர் மகன்,— இவன்ரொம்ப நல்லவன்.''

''நீ எப்படி?''

''நானும்நல்லவன்தான். என் பெருமையை நானே சொல்லிக் கொள்ளக் கூடாது அல்லவா?''

''நீங்கள் இருவரும் எதற்காக இங்கே வந்திருக் கிறீர்கள்?''

''சக்கரவர்த்திக்கு உடம்பு குணம் இல்லை அல்லவா? அவருடைய நோயைக் குணப்படுத்தச் சில மூலிகைகள் வேண்டி



**அண்ணாவுக்கு "அறிஞர்" பட்டத்தைக் கொடுத்தது யார்?**

36ம் பக்கம் பார்க்க

யிருக்கின்றன. இந்தக் காட்டில் அபூர்வ மூலிகைகள் இருக்கின்றனவாமே? அதற்காகத்தான் வைத்தியர் மகனும் நானும் வந்திருக்கிறோம்...."

"சற்று முன் இலங்கைக்குப் போக வேண்டும் என்று சொன்னாயே?"

"இங்கே கிடைக்காத மூலிகைகளை இலங்கையிலிருந்து கொண்டு வரவேண்டும். இலங்கையில் அனுமார் கொண்டு வந்த சஞ்சீவி பர்வதம் இன்னமும் இருக்கிறதாமே?"

"ஆமாம். இருக்கிறது. அதனாலே தான் அங்கே ஆயிரக் கணக்கான ஜனங்கள் விஷக் காய்ச்சலில் இப்போது செத்துப் போய்க் கொண்டிருக்கிறார்கள்..."

"அதுவும் அப்படியா? எனக்குத் தெரியாதே! எங்களை அனுப்பிய அரண்மனை வைத்தியருக்கும் அது தெரியாது..."

"ஆண் பிள்ளைகளைப் போல் பொய் சொல்லுகிறவர்களை நான் கண்டதே இல்லை. இரண்டு நாளைக்கு முன் இரண்டு பேர் இங்கே வந்தார்கள். அவர்களும் இப்படித்தான் ஏதோ பொய் சொன்னார்கள். ஆனால் அவர்கள் சொன்னது கொஞ்சம் நம்பக் கூடிய பொய்யாக இருந்தது..."

"அவர்கள் யார்? என்ன பொய் சொன்னார்கள்?"

"அவர்கள் தங்களை யாரோ மந்திரவாதி அனுப்பியதாகச் சொல்லிக் கொண்டார்கள். சக்கரவர்த்திக்கு ரட்சை கட்டுவதற்காகப் புலி நகமும் யானை வால் ரோமமும் வேண்டும் என்றும் அதற்காக இலங்கை போவதாகவும் சொன்னார்கள். அவர்களை அழைத்துக் கொண்டு என் அண்ணன் படகோட்டிக்கொண்டு இலங்கைக்குப் போயிருக்கிறான்..."

"ஓ! ஓ! அதுவும் அப்படியா?" என்றான் வந்தியத்தேவன். அவனுக்கு ரவிதாஸன் என்னும் பயங்கர மந்திரவாதியின் நினைவு வந்தது. இரவில் படுத்திருந்த பாழும் மண்டபத்தில் அடைந்த பயங்கர அநுபவமும் நினைவுக்கு வந்தது. கடவுளே! இந்த மாதிரிக் காரியங்களில் எல்லாம் ஏன் சிக்கிக் கொண்டோம்? போர்க்களத்தில் நேருக்கு நேர் பகைவனுடன் நின்று போர் புரிய வேண்டும். அப்போது நம் வீரத்தையும் தீரத்தையும் காட்ட வேண்டும். இந்த மாதிரி தந்திர மந்திர சூழ்ச்சிகளில் எதற்காக அகப்பட்டுக் கொண்டோம்?

நமக்கு முன்னாலேயே இலங்கைக்குப் படகில் சென்றிருப்பவர்கள் யாராக இருக்கக்கூடும்? இந்தப் பெண்ணை எவ்வளவு தூரம் நம்பலாம்? இவளும் ஒருவேளை அந்தச் சதிகாரக் கூட்டத்தைச் சேர்ந்தவளாக இருக்கக் கூடுமோ?... இராது. இராது! இவள் கள்ளங் கபடம் அற்ற பெண். இவளை எப்படியாவது சிநேகம் செய்து வைத்துக் கொள்வது நல்லது.

"பூங்குழலி! உன்னிடம் உண்மையைச் சொல்லி விடுகிறேன். சற்றுமுன் மூலிகை கொண்டு வர நான் வந்திருப்பதாகச் சொன்னேனே, அது பொய் தான்! மிக முக்கியமான இரகசியமான காரியத்துக்காக நான் இலங்கைக்குப் போகிறேன். அதை உன்னிடம் சொல்ல விரும்புகிறேன்..."

"வேண்டாம்! முக்கியமான இரகசியமான காரியங்களைப் பெண்களிடம் சொல்லக் கூடாது என்று உனக்குத் தெரியாதா? என்னிடம் ஒன்றும் சொல்ல வேண்டாம்..."

"சாதாரணப் பெண்களைப் பற்றித் தான் அப்படிச் சொல்வார்கள். உன்னிடம் இரகசியத்தைக் கூறினால் அப்படி ஒன்றும் நேர்ந்து விடாது."

"நான் சாதாரணப் பெண் இல்லை என்று உனக்கு எப்படித் தெரிந்தது?

என்னை நீ பார்த்து ஒரு நாழிகை கூட ஆகவில்லையே!''

''பூங்குழலி! உன்னை அந்தக் கோயி லின் மதில் மீது முதன் முதலில் பார்த்தவுடனேயே எனக்குப் பிடித்துப் போய்விட்டது. உன்னை ஒன்று கேட் கிறேன். அதற்கு உண்மையாக மறு மொழி சொல்கிறாயா?''

''கேட்டுப் பார்!''

''சேந்தன் அமுதன் உன்னுடைய காதலன் அல்ல என்பது நிஜமா? அவனை நீ மணந்து கொள்ளப்போவதில்லையா?''

''எதற்காகக் கேட்கிறாய்?''

''சேந்தன் அமுதன் என் சிநேகிதன். அவனுக்கு எதிராக நான் ஒன்றும் செய் யக்கூடாது. ஆனால் அவன் உன் காத லன் இல்லை என்றால்....''

''சொல்லு! ஏன் தயங்குகிறாய்?''

''அந்த ஸ்தானத்துக்கு நான் விண் ணப்பம் போடலாம் என்று பார்க் கிறேன். பூங்குழலி! காதலைப் பற்றி நீ குறைவாகப் பேசுவது எனக்குப் பிடிக்க வில்லை. உலகத்தில் காதலைக் காட்டி லும் தெய்விகமான சக்தி வேறு ஒன்றும் இடையாது. அப்பர், சுந்தரர், சம்பந் தர் எல்லாரும் கடவுளைக் காதலனாகக் கொண்டு பாடியிருக்கிறார்கள். தொல் காப்பியரும், வள்ளுவரும், மற்றும் தமிழ்ப் பெரும் புலவர்களும் காதலைப் பற்றிப் பாடியிருக்கிறார்கள். காளி தாஸனும் காதலைப் பற்றிப் பாடி யிருக்கிறான். பிருந்தாவனத்தில் கண் ணன் கோபியரின் காதலுக்கு வசப் பட்டான்...''

''ஐயா! நான் ஒன்று சொல்கிறேன். அதை நன்றாய்க் கேட்டு மனத்தில் வாங்கிக் கொள்ளும்!''

''அது என்ன?''

''எனக்கும் உம்மைக் கண்டால் பிடித்துத்தான் இருக்கிறது. இரண்டு நாளைக்கு முன் வந்தவர்களைப் பார்த்த தும் உண்டான வெறுப்பு உம்மிடம் உண்டாகவில்லை....''

''ஓ! ஓ! நான் யோகசாலிதான்!''

''ஆனால் காதல், கீதல் என்ற பேச்சை மட்டும் எடுக்க வேண்டாம்!''

''ஏன்? ஏன்?''

''சேந்தன் அமுதன் என் காதலன் இல்லை. ஆனால் எனக்கு வேறு காத லர்கள் இருக்கிறார்கள்...''

''அடடா! அடடா! வேறு காதலர் களா! யார்? எத்தனை பேர்?''

''இரவு நடுநிசியில் நான் வீட்டி லிருந்து எழுந்து செல்வேன். என்னைப் பின்தொடர்ந்து வந்தால் அவர்களை உமக்குக் காட்டுவேன். நீரே பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.''

இப்படிச் சொல்லிவிட்டுப் பூங்குழலி 'ஹா ஹா ஹா' என்று சிரித்தாள்.



அந்தச் சிரிப்பு வந்தியத் தேவனுடைய நெஞ்சை என்னமோ செய்தது. பாவம்! இந்தப் பெண்ணுக்குச் சித்தப்பிரமை போலும்! நம்முடைய காரியத்துக்கு இவள் மூலமாக எந்த வித உதவியையும் எதிர்பார்ப்பது வீண்! இவளிடம் ஒன்றும் சொல்லாமல் இருப்பதே நலம்.

கலங்கரை விளக்கின் அருகிலிருந்த வீட்டை அவர்கள் நெருங்கினார்கள். வீட்டுக்குள்ளிருந்து ஒரு பெரியவரும் வயது முதிர்ந்த ஸ்திரீயும் வெளியே வந்தனர். பூங்குழலியையும் மற்ற இருவரையும் குதிரைகளையும் பார்த்து விட்டுப் பெரியவர் திகைத்து நின்றார்.

''பூங்குழலி! இவர்கள் யார்? எங்கே இவர்களைப் பிடித்தாய்?'' என்று கேட்டார்.

''நான் இவர்களைப் பிடிக்கவில்லை அப்பா! இவர்கள்தான் என்னைப் பிடித்தார்கள்!'' என்றாள் பூங்குழலி.

''எல்லாம் ஒன்றுதான். பொழுது போவதற்கு முன்னால் வீட்டுக்கு வந்து விடு என்று சொன்னால் நீ கேட்பதில்லை. மூந்தாநாள் இரண்டு பேரை அழைத்துக் கொண்டு வந்தாய். இன்றைக்கு இரண்டு பேரை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறாய்! இவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள்?''

''சக்கரவர்த்தியின் வைத்தியத்துக்காக மூலிகை கொண்டு போவதற்கு இவர்கள் வந்திருக்கிறார்கள் அப்பா!''

''ஏன் ஐயா! இந்தப் பெண் சொல்வது உண்மைதானா?'' என்று அந்தப் பெரியவர் வந்தியத் தேவனைப் பார்த்துக் கேட்டார்.

''ஆம், பெரியவரே! இதோ சீட்டு!'' என்று சொல்லி வந்தியத் தேவன் இடையில் கட்டியிருந்த துணிச் சுருளிலிருந்து ஓலை ஒன்றை எடுத்துப் பெரியவரிடம் கொடுத்தான்.

அதே சமயத்தில் இன்னொரு ஓலை தரையில் விழுந்தது. அதை அவசரமாகக் குனிந்து எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டான்.

''பெரிய மூடன் நான்! ஒரு தடவை காரியம் கெட்டும் புத்தி வரவில்லை!'' என்று வாய்க்குள் முணு முணுத்துக் கொண்டான்.

பெரியவர் அந்த ஓலையை வாங்கிக் கொண்டார். கலங்கரை விளக்கின் வெளிச்சத்தில் அதைக் கவனமாகப் பார்த்தார். அவர் முகம் மலர்ந்தது. தமது மனையாளை நோக்கி, ''இளைய பிராட்டி ஓலை கொடுத்து அனுப்பியிருக்கிறாள். இவர்களுக்கு உணவு அளிக்க வேண்டும். உள்ளே சென்று உன் மருமகளிடம் சொல்லு! சோற்றுப் பானையைக் கவிழ்த்து உருட்டி விடப் போகிறாள்!'' என்றார். **(தொடரும்)**

## அண்ணாவுக்கு 'அறிஞர்' பட்டத்தைக் கொடுத்தவர் இவரே!



கல்கி - ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் தலைமையில் ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடாகி யிருந்தது. அதில் அண்ணாவும் வேறு பலரும் உரையாற்ற அழைக்கப் பட்டிருந்தனர். குறிப்பிட்டிருந்த நேரம் கடந்தும், அண்ணாவைத் தவிர பிற பேச்சாளர்கள் கூட்டத்துக்கு வரவில்லை. இதனால் அங்கு குழுமி யிருந்த பொது மக்களுக்குப் பெரும் மனக்குறை ஏற்பட்டுவிட்டது. அதனையறிந்த அண்ணா அவர்கள், சலிப்பை அகற்ற ஓர் உத்தியைக் கையாண்டார் அந்தக் கூட்டத்தில் பிறர் பேசவேண்டிய தலைப்புக்களையும், தாம் பேசவந்த தலைப்பினையும் எடுத்துக் கொண்டு, முன்குறிப்பு எதுவுமின்றி, தட்டுத் தடங்கல் இல்லாமல் அண்ணா ஒவ்வொரு தலைப்பை ஒட்டியும் மிக அழகாகப் பேசி முடித்தார். பல்வேறு தலைப்புக்களையும் வைத்து, முன் தயாரிப்பில்லாமல் உரையாற்றிய அண்ணாவின் ஆற்றலைக் கண்டு 'கல்கி' அவர்கள் வியப்பில் ஆழ்ந்தார்; உளமாறப் பாராட்டினார். அத்துடன் பொதுமக்கள் முன்னிலையில் அண்ணா அவர்களுக்கு 'அறிஞர்' என்னும் பட்டத்தையும் சூட்டி மகிழ்ந்தார்!

(அண்ணா எழுதிய 'ஓர் இரவு' நாடகத்தைப் பார்த்துவிட்டுத்தான் கல்கி - ரா. கிருஷ்ணமூர்த்தி அண்ணா அவர்களைத் 'தென்னாட்டுப் பெர்னாட்ஷா' - என்றும் பாராட்டியுள்ளார்.)

- 'பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு' என்ற வாழ்க்கைப் புத்தகத்தைத் தொகுத்துக் குறிப்புத் தந்தது : கலாபன் வாஸ்.

இருமல் மற்றும் தொண்டைப்
புண் கிருமிகளுக்கு
ஒரே-நிமிஷத்தில்
விடை கொடுப்பது

மருத்துவ நிரூபணம் பெற்ற

# ஸ்ட்ரெப்ஸில்ஸ்

இரண்டு தனிப்பட்ட ஆன்டிஸெப்டிக் மருந்து-கள் அடங்கிய ஸ்ட்ரெப்ஸில்ஸ் தொண்டைப் புண்ணையும் இருமலையும் விளைவிக்கும் கிருமிகளை அதி விரைவாகக் கொல்லுகிறது.

## ஸ்ட்ரெப்ஸில்ஸ்

ஆன்டிஸெப்டிக் தொண்டை மாத்திரைகள்.





பூட்ஸ்
ஆராய்ச்சியின்
தயாரிப்பு

கையடக்கமான அலுமினியம் ஃபாயில்
ஸ்ட்ரிப்களில் விற்கப்படுகிறது.

CMBS-8-152 TM

# மகாபாரதம்

ராஜாஜி

## 88. குந்திக்குக் கொடுத்த வாக்கு

திருதராஷ்டிரன் சஞ்சயனிடம் புலம்பினான்: "நெருப்பில் விழுந்து சாகும் பூச்சிகளைப் போல் துர்முகனையும் துர்ஜயனையும் யுத்தத்தில் பிரவேசிக்கச் செய்து மூர்க்கன் துரியோதனன் தன் அருமைத் தம்பிகளைக் கொன்றானே. 'கர்ணனுக்குச் சமமான வேறொரு வீரனை நான் உலகில் கண்டதில்லை. கர்ணனைச் சகாயமாகக் கொண்ட என்னை யுத்தத்தில் தேவர்கள் கூட ஜெயிக்க முடியாது. இந்தப் பாண்டவர்களா ஜெயிக்கப் போகிறார்கள்?' என்று மூர்க்கன் சொன்னானே! இப்போது பீமசேனனுக்கு எதிரில் கர்ணன் முதுகு காட்டி ஓடியதைப் பார்த்துத்



துரியோதனன் என்ன செய்தான்? சஞ்சய! காலனைப் போன்ற மகா பலத்தைப் படைத்த வாயு புத்திரனுடைய விரோதத்தைத் துரியோதனன் சம்பாதித்துக் கொண்டிருக்கிறான். ஐயோ! நாம் கெட்டோம்!''

சஞ்சயன், ''புத்தியில்லாத குமாரனுடைய சொல்லைக் கேட்டுப் பாண்டவர்களுடைய ஆறாத பகையைச் சம்பாதித்தது நீரேயல்லவா? நீரேயல்லவோ இந்த அனர்த்தத்துக்கு முக்கிய காரணம்? பீஷ்மர் முதலிய பெரியோர்கள் சொன்னதையும் கேட்காமல் ஆரம்பித்த காரியத்தின் பயனை இப்போது அனுபவிக்கிறீர். உம்மையே நொந்து கொள்ளாமல் யுத்தம் செய்கிற வீரர்களை ஏன் நிந்திக்கிறீர்?'' என்று கிழவனுடைய வீண் புலம்பலை நிறுத்தச் சொன்னான்.





பீமசேனனால் கர்ணன் தோல்வி அடைந்ததைக்கண்டு திருதராஷ்டிர புத்திரர்களான துர்மர்ஷன், துஸ்ஸஹன், துர்மதன், துர்த்தரன், ஜயன் ஆகிய ஐவரும் பீமனை எதிர்த்தார்கள். இவர்கள் வருவதைக் கண்டு தைரியம் அடைந்து கர்ணன் மறுபடியும் பீமனை நோக்கிப் பாணங்களை விட்டான். பீமசேனன் திருதராஷ்டிர புத்திரர்களை முதலில் அலட்சியம் செய்து கர்ணனையே எதிர்த்துக் கொண்டிருந்தான். ஆனால் அவர்களோ கர்ணனைச் சுற்றிக்கொண்டு அம்புகள் எய்து பீமனைப் பலமாக எதிர்த்தார்கள். அதன் மேல் பீமன் கோபம் கொண்டு அந்த ஐந்து தார்த்தராஷ்டிரர்களைத் தன் பாணங்களுக்கு இரையாக்கினான். சாரதிகளோடும் குதிரைகளோடும் அந்த ஐந்து வாலிபர்களும் உயிர் இழந்து யுத்த பூமியில் கிடந்தது, காட்டில் புயல் காற்று அடித்த பிறகு புஷ்பங்களோடு கீழே விழுந்த அழகிய மரங்களைப் போல் காட்சியளித்தது.

இவ்வாறு மறுபடியும் ஐந்து ராஜகுமாரர்கள் யமாலயம் சென்றதைக் கண்ட கர்ணன் முன்னைவிடக் கோரமான யுத்தம் செய்ய ஆரம்பித்தான். பீமனும் கர்ணன் செய்த தீங்கையெல்லாம் நினைத்துக் கூர்மையான பாணங்களைத் தொடுத்துக் கர்ணன்மேல் விட்டான். கர்ணனுடைய வில்லை உடைத்துத் தள்ளி அவனுடைய குதிரைகளையும் சாரதிகளையும் கொன்றான். அதன்மேல் கர்ணன் தேரினின்று இறங்கிக் கதாயுதத்தை எடுத்து வீசினான். பீமசேனன் வில்லை வளைத்து அம்புகளால் அந்தக் கதையைத் தடுத்து விட்டுக் கர்ணன்மேல் அம்புமாரி பொழிந்தான். மறுபடியும் கர்ணன் முதுகு காட்டிக் காலால் நடந்து சென்றான்.

இதைக் கண்ட துரியோதனன் மிகவும் துயரப்பட்டு, தன் தம்பிமார்கள் சித்திரன், உபசித்திரன், சித்திராக்ஷன், சாருசித்திரன், சராஸனன், சித்திராயுதன், சித்திரவர்மன் ஆகிய எழுவர்களையும் ராதேயனுக்கு உதவியாக அனுப்பினான். அவர்களும் விசித்திரமான சாமர்த்தியத்தைக் காட்டிப் பீமசேனனை எதிர்த்தார்கள். ஆனால் அவர்களும் ஒருவர் பின் ஒருவ

ராகப் பீமனுடைய கோபத்துக்கு இரையாகிக் களத்தில் உயிரற்றுவிழுந்தார்கள். கர்ணன் கண்ணீர் நனைந்த முகத்தோடு வேறு ஒரு தேரின் மேல் ஏறிக் காலாந்தகனைப்போல் கோபம் மேலிட்டுப் பீமனைத் தாக்கினான். இடியும் மின்னலும் கூடிய மேகங்களைப் போல் இருவரும் விளங்கினார்கள். கேசவனும் சாத்யகியும் அருச்சுனனும் பீமனுடைய பராக்கிரமத்தைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தார்கள். கௌரவ பட்சத்திலிருந்து பூரிசிரவசும், கிருபரும், அசுவத்தாமாவும், சல்லியனும், ஜயத்ரதனும் இன்னும் எல்லா வீரர்களும் 'ஹா! ஹா!' என்று பீமனைப் பார்த்து வியந்து புகழ்ந்தார்கள்.

இதையெல்லாம் கண்டு பொறுதவனான துரியோதனன் கர்ணனுடைய நிலைமையைப் பற்றிக் கவலை கொண்டு, ''பீமனுடைய அம்புகள் ராதேயனைக் கொல்லப் போகின்றன. உடனே நீங்கள் சென்று பீமனை எதிர்த்து அவனைச் சூழ்ந்துகொள்ளுங்கள்'' என்று தன் சகோதரர்கள் வேறு ஏழு பேர்களையும் அனுப்பினான். சத்ருஞ்சயன், சத்ருஸஹன், சித்திரன், சித்திராயுதன், திடன், சித்திரசேனன், விகர்ணன் இவ்வேழு பேர்களும் பீமனைச் சூழ்ந்து கொண்டு ஒரே சமயத்தில் பீமனை மிகவும் பீடித்தார்கள்.

துரியோதனன் அனுப்பிய இந்த ஏழு தம்பிமார்களும் பீமனுடைய அம்புகளுக்கு இரையாகி உயிரற்று யுத்த பூமியில் விழுந்தார்கள்.

எல்லோருக்கும் பிரியனான விகர்ணனும் பின்வாங்காமல் எதிர்த்துக் கொல்லப்பட்டு விழுந்ததும் பீமன், ''தருமமும் நியாயமும் அறிந்த விகர்ணனே! க்ஷத்திரியக் கடமைகளைச் செய்ய நீ யுத்தத்தில் சேர்ந்து கொல்லப்பட்டாய்! உன்னையும் நான் கொல்ல வேண்டியவனாக ஆனேன். நீயும் பிதாமகர் பீஷ்மரும் கொல்லப்பட வேண்டியதாகிய இந்த யுத்தம் கொடிய யுத்தம்'' என்று துக்கித்தான்.

துரியோதனனுடைய சகோதரர்கள் தன்னைக் காப்பாற்றுவதற்காக ஒருவர் பின் ஒருவராக இவ்வாறு வந்து இறப்பதைக் கண்டு துயரம் மேலிட்ட கர்ணன், ரதத்தின் மேல் சாய்ந்து இரண்டு கண்களையும் மூடிக் கொண்டு மயக்கமடைந்தான். மறுபடியும் மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு போர் தொடங்கினான்.

பீமன் விடுத்த அம்புகள் கர்ணனுடைய வில்லை உடைத்தன. அவனும் ஒன்றன்பின் ஒன்றாக வேறு விற்களை எடுத்து யுத்தம் செய்தான். பதினெட்டுத் தடவை இம்மாதிரிக் கர்ணனுடைய வில் உடைந்தது. கர்ணனும் தன் சாவதானத்தை இழந்து பீமனைப்போலவே கோபாவேசமானான். இருவரும் ஒருவரையொருவர் கோரமான பார்வைகளுடன் பார்த்துக் கொண்டு யுத்தம் செய்தார்கள். பீமன் அப்போது செய்த சிம்மநாதம் யுதிஷ்டிரனுக்கு மறுபடியும் கேட்டது. தருமபுத்திரனும் உற்சாகமடைந்து போர் வாத்தியங்களை ஒலிக்கச் செய்து துரோணரைப் பலமாக எதிர்த்தான்.

கர்ணனும் பீமனும் மறுபடியும் யுத்தம் தொடங்கினார்கள். பீமன் குதிரைகளும் சாரதியும் இழந்து தேரும் உடைபட்டு வில்லும் இழந்தவனானான். அதன் மேல் பீமன் சக்தியாயுதத்தை எடுத்துக் கர்ணனுடைய ரதத்தின் மேல் பிரயோகித்தான். கர்ணன் அதை அம்புகளால் தடுத்துப் பயனற்றதாகச் செய்யவே, கத்தியையும் கேடயத்தையும் ஏந்திப் பீமன் கர்ணனை எதிர்த்தான். ஒரு விநாடியில் கேடயம் கர்ணனுடைய அம்பினால் நாசம் செய்யப்பட்டது. கேடயத்தை இழந்ததும் பீமசேனன் கத்தியைச் சுழற்றிக் கர்ணன் மேல் எறிந்தான். அது ராதேயனுடைய வில்லை அறுத்துத் தள்ளி விட்டுக் கீழே விழுந்தது. உடனே அவன் வேறொரு வில்லை எடுத்து அதுவரையில் நடைபெறாத முறையில் அம்புகளைப் பிரயோகித்துப் பீமனை மிகவும் பீடித்தான். பீமன் உக்கிரமான கோபம் கொண்டு உயரக் கிளம்பிக் கர்ணன் தேரில் குதித்துப் பாய்ந்தான். ராதேயன் உடனே கொடி மரத்தடியில் பதுங்கிப் பீமனுடைய பாய்ச்சலுக்குச் சிக்காமல் தப்பித்துக் கொண்டான். பிறகு பீமன் மறுபடியும் கீழேகுதித்து, இறந்துகிடந்த யானைக் குவியல்களில் நுழைந்து கர்ணனுடைய அம்புகள் தன் மேல் பாயாமல் தடுத்துக் கொண்டு விசித்திரமான போர் புரிந்தான். யுத்தகளத்தில் வீழ்ந்து கிடந்த தேர்ச் சக்கரங்கள், குதிரை, யானை முதலியவற்றின் வெட்டுப்பட்டுக் கிடந்த அங்கங்கள் இவற்றையெல்லாம் எடுத்து வீசி யுத்தத்தை நிறுத்தாமல் கர்ணனை எதிர்த்துக் கொண்டே நின்றான்.

இவ்வாறு பீமசேனன் ஆயுதமற்றுத் தன்னை எதிர்த்துக் கொண்டு கஷ்ட நிலையிலிருக்கும் போது கர்ணனுக்கு ''அருச்சுனனைத் தவிர உன் மக்களில் மற்ற நால்வரை நான் கொல்லமாட்டேன்'' என்று தாயார் குந்திக்குத்

தான் கொடுத்த வாக்கு நினைவுக்கு வந்தது.

''மூடனே! பெருந் தீனிக்காரனே! யுத்தம் செய்யத் தெரியாதவனே! நீ காட்டில் பழங்களையும் கிழங்குகளையும் வயிறு நிறையத் தின்பதற்கே தகுந்தவன்! க்ஷத்திரியர்கள் செய்யும் யுத்தத்துக்கும் உனக்கும் வெகுதூரம். யுத்தகளத்தை விட்டுப் போ!'' என்று பலவாறாக ஏசிப் பீமனைக் கோபம் பொங்கச் செய்தான்.

''கர்ணனால் பீடிக்கப்படும் பீமசேனனைப் பார்'' என்று கிருஷ்ணன் அருச்சுனனுக்குச் சொன்னான். கோபாக்னியால் கர்ணனை எரித்து விடுவது போல் தனஞ்சயன் கண்கள் சிவந்தன. காண்டீபத்தை வளைத்துக் கர்ணன் மேல் அம்புகள் விட்டான். கர்ணன் பீமனை விட்டு விலக வேண்டியதாயிற்று. குந்திக்குக் கொடுத்த வாக்கை எண்ணிச் சந்தோஷமாகவே விலகினான்.

# 89. சௌமதத்தன் வதம்

''அதோ உன்னுடைய சிஷ்யனும் நண்பனும், சத்திய பராக்கிரமனுமான சாத்யகி சத்துருப் படைகளைக் குலைத்துவிட்டு வெற்றியோடு வருகிறான் பார்!''

தேர் நடத்திக் கொண்டிருந்த கிருஷ்ணன் தனஞ்சயனுக்கு இவ்வாறு சொன்னான்.

''மாதவா! தருமபுத்திரரை விட்டு விட்டுச் சாத்யகி இங்கு வந்தது எனக்குப் பிடிக்கவில்லை. துரோணர் அவ்விடம் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறார். தருமபுத்திரரைக் காப்பாற்ற வேண்டிய இவன் இங்கே இப்படி வந்துவிடலாமா? ஜயத்ரதனும் கொல்லப்படவில்லை. இதோ பார்! பூரிசிரவசு, சாத்யகியை எதிர்க்கிறான். இந்தச் சந்தர்ப்பத்தில் சாத்யகியை யுதிஷ்டிரர் இவ்விடம் அனுப்பிவிட்டது பெருந் தவறு'' என்றான் அருச்சுனன்.

*   *   *

கண்ணனைப் பெறுவதற்காக அவதரித்தாள் தேவகி. அவளுடைய சுயம்வரத்தில் சௌமதத்தனுக்கும் சினிக்கும் பெரிய யுத்தம் நடந்தது. வாசுதேவனுக்காக சினியானவன் சௌமதத்தனை ஜெயித்துத் தேவகியைத் தன் தேரில் ஏற்றி வைத்துக் கொண்டு சென்றான். அன்று முதல் இந்த இரண்டு குலங்களுக்கும் ஜன்ம விரோதம் ஏற்பட்டு விட்டது. சினியின் பேரன் சாத்யகி. சௌமதத்தனின் மகன் பூரிசிரவசு. சாத்யகியைக் கண்டதும் பரம்பரைப் பகையை யொட்டி அவனைப் பூரிசிரவசு யுத்தத்திற்கு அழைத்தான்.

''சூரன் என்று எப்போதும் கர்வம் கொண்டிருக்கும் சாத்யகியே! இதோ உன்னைத் தொலைத்துவிடப் போகிறேன். நெடுநாளாக நான் விரும்பிய யுத்தம் இப்போது எனக்குக் கிடைத்தது. தசரத குமாரனாகிய லக்ஷ்மணனால் வதம் செய்யப்பட்டு இந்திரஜித்து மாண்டதைப் போல் என்னால் வதம் செய்யப்பட்டு நீ இன்று யமலோகத்துக்குப் போவாய். உன்னால் கொல்லப்பட்ட வீரர்களுடைய ஸ்திரீகள் இன்று திருப்தி அடைவார்கள்.''

இவ்வாறு சொல்லிப் பூரிசிரவசு சாத்யகியை யுத்தத்துக்கு அழைத்தான்.

''வீண் வார்த்தைகளை அடுக்கிக் கொண்டு போவதில் என்ன பயன்? யுத்தத்தில் பயம் இல்லாதவனிடம் இந்தப் பேச்சுக்கள் என்னத்திற்காக? பேச்சை விட்டு விட்டுச் செய்கையினால் உன் சூரத்தனத்தைக் காட்டு. சரத் காலத்தில் மேகங்கள் வீண் இடி முழக்கம் செய்வதைப் போல் வெறும் கர்ஜனை செய்ய வேண்டாம்'' என்று சிரித்துக்கொண்டு சொன்னான் சாத்யகி.

போர் தொடங்கினார்கள். இருவரும் இரண்டு சிங்கங்கள் போல் யுத்தம் செய்தார்கள்.

குதிரைகள் கொல்லப்பட்டு, விற்கள் அறுபட்டு, ரதங்கள் இழந்து, இருவரும் தரையில் கத்தியும் கேடயமுமாக நின்றார்கள். இருவரும் ஆச்சரியமான சஞ்சாரங்கள் செய்தார்கள். ஒரு முகூர்த்த காலம் கத்திச் சண்டை நடந்த பிறகு கேடயங்கள் அறுபட்டுக் கைச் சண்டை ஆரம்பித்தது.

ஒருவரை யொருவர் இறுகக் கட்டிக் கொண்டு பூமியில் சுழன்றும் துள்ளி எழுந்தும் மறுபடி ஒருவரையொருவர் தள்ளியும் இவ்வாறு யுத்தம் நெடுநேரம் செய்தார்கள். பார்த்தன் அச்சமயம் சிந்துராஜனோடு போர் செய்து கொண்டு அவன் வதத்தில் மனத்தைச் செலுத்தியவனாக இருந்தான்.

''தனஞ்சய! சாத்யகி களைத்துப் போனதைப் பார்! சாத்யகியை இந்தப் பூரிசிரவசு கொல்லப் போகிறான்'' என்றான் கிருஷ்ணன். தனஞ்சயன் ஜயத்ரதன் பேரிலேயே கவனமாக இருந்தான். **(தொடரும்)**





# கொரிப்பதற்குக் கொஞ்சம்

தப்பிஸ்கேள் ஜாக்கிரதை!

நல்ல காரியத்தை ஒழுங்கானபடி செய்தால் பரிசு கொடுப்பது வழக்கம். பழக்கத்திலுள்ளதையே செய்து கொண்டு போனால் இன்று ஆட்சியிலுள்ளோருக்கு என்ன மதிப்பு? புதுமையை அல்லவா புகுத்த வேண்டும்? ஆகவே, நடந்துவிட்ட தவறுகளைக் கண்டுபிடிப்பவர்களுக்குப் பரிசு என்று ஒரு புரட்சிகரமான திட்டம் கொண்டுவந்திருக்கிறார்கள்!

மைசூர் கல்வித் துறையைச் சேர்ந்த உயர் அதிகாரியொருவர் சமீபத்தில் இப்படி ஓர் அறிக்கை விடுத்திருக்கிறார். இப்போதெல்லாம் அந்தந்த ராஜ்ய அரசாங்கமே பாடப் புத்தகங்களைத் தயாரித்து வெளியிட்டு வருகிறதல்லவா?.... இந்தப் பாடப் புத்தகங்களில் காணப்படும் தவறுகளையும் அபத்தங்களையும் கண்டு பிடித்துத் தெரிவிப்பவர்களுக்குப் பரிசு வழங்கப்படும் என்று அவர் அறிவித்திருக்கிறார். ஒவ்வொரு பிழைக்கும், அதன் தரத்துக்குத் தக்கபடி, ஐந்து ரூபாய் முதல் ஐம்பது ரூபாய் வரையில் பரிசு கிடைக்குமாம்.

இந்தச் செய்தியைப் படித்தவுடன், 'ஆகா! இந்த அருமையான யோசனையைப் பாடப் புத்தகங்களுக்கு மட்டுமின்றி, மற்ற துறைகளுக்கும் விஸ்தரித்துப் பார்த்தால் என்ன?' என்று தோன்றியது. அப்படிச் செய்தால் —



போலீஸ்காரர் ஒருவர் இருக்கிறார். அவருக்கு அவ்வளவாகச் சாமர்த்தியம் போதாது. லட்டுப் போலக் கை மேலே வந்து விழுகிற கேஸைக்கூட அவர் நழுவ விட்டு விடக் கூடியவர். ஆனால் அதைப் பற்றி அவர் கவலைப்பட வேண்டியதே இல்லை. ஏனென்றால், அவர் செய்கிற ஒவ்வொரு தவற்றையும் மேலதிகாரி ஒருவர் பார்த்து, உரிய இடத்துக்குத் தகவல் கொடுத்துக் கொண்டேயிருப்பார்; அந்த அதிகாரிக்குப் பரிசும் கிடைத்துக்



கொண்டிருக்கும். இப்படிப்பட்ட ஒரு நிலைமையில் எந்த ஒரு மேலதிகாரியும் இந்தப் போலீஸ்காரரைத் திறமைக் குறைவு காரணமாக வேலையை விட்டு நீக்கிவிட வேண்டும் என்று மேலிடத்துக்குச் சிபாரிசு செய்ய மாட்டார். அப்படிச் செய்தாரானல் மேலதிகாரிக்குக் கிடைக்கும் உபரி வருமானம் பறி போய் விடுமல்லவா?

அது மட்டுமா? நமக்குக் கீழே வேலை செய்கிறவர்களெல்லாம் முட்டாள்களாக இருக்க மாட்டார்களா என்று உயர் அதிகாரி ஏங்கவே ஆரம்பித்து விடுவார். முழு முட்டாள்கள்தானே பெரிய தப்புக்களைச் செய்வார்கள்? பெரிய தவறுகளைக் கண்டுபிடித்தால்தானே உயர் அதிகாரிக்குப் பெரிய தொகை பரிசாகக் கிடைக்கும்?

சர்க்கார் அலுவலகம் ஒன்றில் இதே போலத் திறமைக் குறைவான ஒரு குமாஸ்தா இருக்கிறுரென்று வைத்துக் கொள்ளுங்கள். அந்தக் குமாஸ்தாவைப் போல் அதிர்ஷ்டசாலி வேறெவரும் இருக்க முடியாது. ஏனென்ருல் அவர் லீவோ, சம்பள அட்வான்ஸோ, நேரம் கழித்து வருவதற்கு அநுமதியோ, சீக்கிரமாக வீட்டுக்குப் போவதற்குப் 'பெர்மிஷனே' கேட்டால் அவை தப்பாமல் அளிக்கப்படும். மேலதிகாரி கொஞ்சம் முரண்டு பிடித்தாலோ குமாஸ்தா உஷாராகி, ஒழுங்காக வேலை செய்ய ஆரம்பித்து விடுவார். அப்புறம் யாருக்கய்யா நஷ்டம்?.... மேலதிகாரிக்குத்தானே?....

பிறர் செய்கிற தவறுகளைச் சுட்டிக்காட்டிப் பரிசு பெறும் இப்படிப்பட்ட ஒரு திட்டம் அமுலுக்கு வந்தபிறகு இரண்டு அரசாங்க அதிகாரிகள் சந்தித்துப் பேசினுல் அவர்கள் பேச்சு கிட்டத்தட்ட இப்படித்தான் இருக்கும்.

''என்ன சுந்தரம், எப்படி இருக்கிறது உம்ம டிபார்ட்மெண்ட் வேலையெல்லாம்?....''

''ஒன்றும் சுகமில்லை, ஐயா...! நமக்கு வந்து சேர்ந்திருக்கிற ஆசாமிகள் அத்தனை பேரும் சுத்த மோசம்.... ஒருத்தனுவது ஒரு தப்பு பண்ணியிருக்க மாட்டானு என்று கண்ணில் விளக்கெண்ணெயை ஊற்றிக் கொண்டு பார்க்கிறேன், ஊஹூம்!.... பைசாவுக்குப் பிரயோசனமில்லாத ஆசாமிகள்!.... ஏன்தான் இப்படிப்பட்டவர்களை, நம்ம தலையிலே கொண்டு வந்து கட்டுகிறுர்களோ!....''

''நல்ல வேளை ஐயா...! அந்த மட்டில் நான் அதிர்ஷ்டம்தான் செய்திருக்கிறேன். என்னுடைய இலாகா ஆசாமிகள் அத்தனை பேரும் மணி மணியானவர்கள். ஒவ்வொருத்தனும் என்ன தப்பு செய்கிறுன் என்கிறீர்கள்...! அவர்கள் புண்ணியத்திலே தான் நம்ம வண்டியே ஓடுகிறது!...''

இன்னுமொரு யோசனை. உயர் அதிகாரிதான் தப்புகளைக் கண்டு பிடித்துப் பரிசுகளைத்தட்டிக்கொண்டு போகவேண்டும் என்பதில்லை. தப்புகளைக் கண்டு பிடிக்கவென்றே தப்பிஸ்டுகளை நியமிக்கலாம். உதாரணமாக, கான்ஸ்டேபிள் பண்ணுகிற தப்பைக் கண்டுபிடிப்பதற்கென்றே 'தப்பிஸ்ட் — கிரேடு ஒன்று' என்ற பெயருடன் ஒரு உத்தியோகஸ்தரை நியமிக்கலாம்.

இப்படியே சப் — இன்ஸ்பெக்டர் முதல் ஐ. ஜி. வரையில் உள்ள அதிகாரிகள் பிரிவு ஒவ்வொன்றுக்குமாகத் தப்பிஸ்டு கிரேடு - இரண்டு, மூன்று என்று நியமித்துக்கொண்டே போகலாம். செக்ரடேரியட் சமுத்திரத்தை நினைத்துப் பாருங்கள். ஆகா! எத்தனை தப்பிஸ்டுகளுக்கு அங்கே வேலை வாய்ப்பிருக்கிறது!....

அது சரி ஐயா, இந்தத் '**தப்பிஸ்டு**'கள் தவறு செய்யாமல் இருக்கிறுர்களா என்று பார்க்க வேண்டாமா? அதற்கென்ன செய்வதாம்?.... ஒவ்வொரு தப்பிஸ்டுக்கும் மேலே ஓர் அஸிஸ்டெண்ட் தப்பிஸ்டைப் போட்டால் கவலை தீர்ந்தது. அஸிஸ்டெண்ட் தப்பிஸ்டுகள் இடறி விழுவதைக் கண்டு பிடிக்க டெபுடி தப்பிஸ்டுகளை நியமிக்கலாம். இதைத்தொடர்ந்து அண்டர் தப்பிஸ்டுகள், சீஃப் தப்பிஸ்ட்டுகள் ஆகியோரையும் நியமிக்கலாம்.

வேலையில்லாத் திண்டாட்டம் தீர இது ஒரு வழி. ஆனல் இந்த வேலைக்கு ஆள் கிடைப்பார்களோ என்ற கவலை மட்டும் வேண்டாம். கட்டின வீட்டுக்குப் பழுது சொல்கிற பேர் வழிகளும், செய்த காரியத்துக்குச் 'சொட்டு'ச் சொல்கிற புண்ணியவான்களும், மற்றவன் எப்போது, என்ன தப்பு செய்வான் என்றே பார்த்துக் கொண்டிருக்கிற ஆசாமிகளும் நம் நாட்டில் கணக்கு வழக்கில்லாமல் இருக்கிறுர்கள். அவர்களையெல்லாம் இந்த வேலையில் இழுத்து விட்டால் தீர்ந்தது!

— **எஸ். வி. ஆர்.**

## ஸ்ரீ கே. வி. ராமையர்

அரையணாவுக்கு நெய்ப் பொங்கல், ஒரு ஸ்பூன் நெய்யுடன் ஓர் இட்லி அரையணா. தோசை அரையணா. ஒரு கப் காப்பி ஓரணா. ஒரு இட்லி, ஒரு வடை, அரை கப் காப்பி சாப்பிட்டுவிட்டு ஒன்னேமுக்காலணா யில் தருவோர் எண்ணிக்கைதான் அதிகம். நாற்பது வருஷங்களுக்குமுன் நான் பாலக்காட்டிலிருந்து திருவல்லிக்கேணிக்கு வந்து உறவினர்களுடன் ஓட்டல் தொழிலில் புகுந்த போது இருந்த நிலையைச் சொல்கிறேன்.

சின்ன வயதிலேயே மார்க்கெட்டுக்குப் போய் விலை விசாரித்துச் சாமான் வாங்கி வருவேன். நூறு ரூபாய்க்குச் சாமான் வாங்கினால் ஒரு வண்டி நிறையக் காணும்.

பார்ட்னர்ஷிப் எல்லாம் முடிந்து நானே சொந்தமாக ஓட்டல் நடத்த ஆரம்பித்தேன். குடிக்கூலிக்கு எடுத்த வீடு விலைக்கு வந்த போதும் வாங்கத் தோன்றவில்லை. வந்த பணத்தைத் தொழிலிலேயே போட்டு விருத்தி பண்ணும் எண்ணம் அப்போது பிரபல ஓட்டல்காரர்களுக்கே தோன்றவில்லை. அந்த நாளிலே ஓகோன்னு வருமானம் வந்த ஓட்டல் எல்லாம் வளராமல் போனதற்குக் காரணம் இதுதான்.

சாப்பாடு மட்டும் போட்டு நடத்திய ஓட்டல்களும் இருந்தன. மூன்றணாவுக்கு முழுச் சாப்பாடு கிடைத்தது. மாதாந்திரச் சாப்பாடு எட்டு ரூபாய். சில ஓட்டல்களில் அறுபது டிக்கெட் பன்னிரண்டு ரூபாய், பதினறு ரூபாய் என்று இருந்ததுகூட 1931–32ல் எட்டே ரூபாயாகக் குறைந்து விட்டது. அந்த வருஷத்தைப் போல அரிசி விலை இறங்கியது, எனக்குத் தெரிந்து இல்லை.

காப்பிக் கொட்டை விசை ஒரு ரூபாய். பால் படி ஆறணா, ஏழணாவுக்கு வாசலிலே வந்து கறக்கும். காப்பி கொட்டையாக வாங்குவோம். இட்லி பானையை இறக்கியதும் மண் சட்டியிலே நாங்களே வறுத்து, கை மெஷினிலே அரைத்துக் கொள்வோம். மெஷின் சரியாக இல்லாவிட்டால் இடித்துத் தூளாக்குவோம்.

இட்லி அளவு தேங்காய்ச் சட்னி போட்டுக்கொண்டு சிலர் சாப்பிடுவார்கள். சிலோன் தேங்காய் நூறு ஏழு ரூபாய்க்குக் கிடைத்த காலம்.

இரவு எட்டு மணிக்கு வியாபாரம் முடிந்துவிடும். மெயின் ரோடிலே ஏழரை மணிக்கு மேல் சந்தடி அடங்கியிருக்கும்.

பதினைந்து வருஷத்துக்கு முன்னே ஓட்டல் நடத்துவதை விட்டு விட்டேன். அதற்கு ஐந்து வருஷத்துக்கு முன்பே சின்ன அளவில் ஒரு லாட்ஜ் தொடங்கினேன். (Free India Lodge) ப்ரீ இந்தியா லாட்ஜ் என்று அதற்குப் பெயர். பிரபல மயிலாப்பூர் வக்கீலின் பங்களா ஒன்று திருவல்லிக்கேணியில் வாடகைக்கு வந்தது. அதை எடுத்து சுமார் பத்தாயிரம் ரூபாய் செலவழித்து, வசதிகள் பண்ணினேன். காலேஜ் மாணவர்களுக்கும், உத்தியோகம் பார்க்கும் பொறுப்பான பிரம்மசாரிகளுக்கும் அது வசதியாயிருந்தது. இன்றும் கௌரவமான சொந்த வீடு போல ரொம்பப் பேர்களுக்கு இருக்கிறது. வருஷக்கணக்காகச் சிலர் இருக்கிறார்கள்.

விலைவாசியிலும் சரி, மனிதர்கள் பழகிய விதத்திலும் சரி, மறுபடியும் அந்த நாளை நினைத்துப் பார்க்கவே முடியாது.






# ஹோட்டல் நடத்திப்பார்!

## ஸ்ரீ ராமகிருஷ்ண ஐதாள

சுமார் முப்பது வருஷங்களாக இந்தத் துறையில் உழைக்கிறேன். எனக்குப் பள்ளிக்கூடப் படிப்பு என்று விசேஷமாகக் கிடையாது. பன்னிரண்டு வருஷங்கள் ஊழியனாக இருந்தேனே அதுதான் பயிற்சி. உட்லண்ட்ஸ் அதிபர் உடுப்பி கிருஷ்ணராவ் அவர்களிடம்

பல நிலைகளில் பயிற்சி கிடைத்தது என் அதிர்ஷ்டம்.

என் சேமிப்பையும் என் மாமா (பின்னால் மாமனார்) சேமிப்பையும் போட்டு மயிலாப்பூரில் ஒரு ஓட்டல் தொடங்கினோம். மூனு டஜன் நாற்காலி, அதற்குத் தேவையான மேஜைகள், வெகு அவசியமான பாத்திரம் பண்டங்களை மட்டும் அளவாக வாங்கினோம். தினசரி சாமான் வாங்க நானே போவேன். பஸ் ஸ்டாண்டும் கோவிலும் பக்கத்தில். எதிர்பார்த்ததற்கு மேலேயே பிஸினஸ் நடந்தது. சில மாதங்களில் சாப்பாட்டு ஓட்டல் தொடங்கினோம். நாளடைவில் அண்ணாவுக்குத் தனியே ஓட்டல் வைத்துக் கொள்ள முடிந்தது.

பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் இருபத்திரண்டு கிரவுண்டு மனையில் இருந்த ஒரு கல்யாண மண்டபத்தை வாங்கினேன். கல்யாண மண்டபத்துக்குப் பின்புறம் இருந்த காலி மனையில் வீடு கட்டிக் கொள்வதாக உத்தேசம். ஒரு நண்பர் இந்த எண்ணத்தை மாற்றினார். பிரதான வீதியில் சொந்த வீடு கட்டிக் கொள்வதைவிட,



ஒரு லாட்ஜ் கட்டலாம் என்று யோசனை கூறினார்.

இதற்கு எதிர்காலம் உண்டு என்பதால் துணிந்தேன். என் சேமிப்பு, நண்பர்கள் செய்த உதவி தவிர, எல். ஐ. ஸி.யிலிருந்து கடன் வாங்கினேன்.

நாற்பத்தேழு அறைகள் கொண்ட 'ஓட்டல் ஸ்வாகத்' எழுந்தது.

அடிப்படைக் கொள்கை இதுதான் : கஸ்டமரைத் திருப்திப்படுத்துவது எங்கள் வேலை. இன்னும் அதிகம் வாடகை கொடுக்க யோக்கியதை உள்ளவர்களும் இங்கே வரும் போது எனக்குப் பெருமையாக இருக்கிறது.

சினிமா பார்த்துவிட்டு வந்து இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் பால் கேட்பவர்களையும் கவனிக்க வேண்டும். ஒரு நாள் ஒரு கப் பால் தராததற்காக ஆயுளுக்கு இந்தப் பக்கம் திரும்ப மாட்டார்கள்! சுரத்துக்கு மிளகு ரசம் தயாரித்துக் கொடுத்தால் ஒரு திருப்தி. வெறும் காய்கறியை வேக வைத்துத் தர வேண்டும் என்று சில பேர் கேட்பார்கள். வீட்டிலே கிடைக்கிற சௌகரியத்தை இங்கே எதிர்பார்ப்பார்கள். சின்ன விஷயமானாலும் கவனித்துச் செய்தால் 'கஸ்டமர்' சந்தோஷப்படுவார்.

மற்றும் ஒன்று. வெளிநாட்டுப் பிரயாணிகள், மேல் நாட்டுப் பாணி ஓட்டல்களையேதான் விரும்புகிறார்கள் என்னும் ஓர் எண்ணம் சாதாரணமாக இருக்கிறது. டூரிஸ்ட் இலாகாவே இந்த எண்ணத்தில்தான் செயல்படுகிறார்கள். ஆனால் அநுபவத்தில், அமெரிக்கரும், ஆஸ்திரேலியரும், ஜெர்மன்காரரும் உள்ளூர் பாணி ஓட்டலை விரும்புவதைப் பார்க்கிறோம். டயரியில் இட்லி தோசை என்று எழுதிக் கொண்டு வந்து அவற்றைக் கேட்கிறார்கள். கையினால் சாப்பிடப் பிரியப்படுகிறார்கள். ஆசையுடன் ரசத்தை உறிஞ்சிக் குடிக்கிறார்கள். ஒரு மாறுதலுக்கு இங்கே வருபவர் இங்குள்ள வாழ்க்கை முறையில் பழக ஆசைப்படுகிறார்கள். இங்கே தங்கி, இங்கு வந்து போகும் ஜனங்களைக் கவனிப்பதில் இருக்கும் நிறைவு அவர்களுக்கு மேல் நாட்டுப் பாணி ஓட்டலின் தனிமைச் சூழ்நிலையில் எப்படிக் கிடைக்கும்? 'காபரே' பார்க்கவா நாடுவிட்டு நாடு வருகிறார்கள்?

அரசாங்க உதவி பற்றி ஒரு வார்த்தை. தொழிலை விஸ்தரிக்க நாங்களே முதல் போட்டால் போதும். வருவாய் ஏறுவதால் போட்ட முதல் திரும்பும். ஆனால் வேறு சில விஷயங்களில், உதாரணமாக, சமையல் அறையை நவீனமாக்க வேண்டும், 'ஆட்டோமேடிக் ஸ்டெரிலைசேஷன்' வைத்துப் பாத்திரங்களைக் கழுவ வேண்டும் என்றெல்லாம் ஆசை உண்டு. ஆனால் செலவழிக்க இயலாது. இந்த மாதிரி விஷயங்களில் அரசாங்க உதவியோ கடனோ கிடைத்தால் நன்றாக இருக்கும்.

ஓட்டல்கள் நவீனமாக ஆக அங்கு உழைப்போருக்கும் சௌகரியம் வளர்ந்து வருகிறது. ஷிப்ட் முறையில் வேலை நடக்கிறது. காஸ் அடுப்பு எங்கும் இருப்பதால் கண் எரிச்சல் இல்லை. அரைப்பதெல்லாம் எலெக்ட்ரிக் மெஷின். ஊழியரில் ஒருவராக நிர்வாகியும் நினைத்து நடந்தால் அவர்கள் நிலையை அனுதாபத்தோடு புரிந்து கொள்ள முடிகிறது.

என் அப்பா சிறு வயதில் என்னை ஓட்டல் வேலைக்கு விடும் போது கண்ணீர் விட்டார். ஆனால் இப்போது நிலை வேறு. என் இரண்டு பையன்களை இந்தத் துறையில் விடவே தயாரித்து வருகிறேன்.

பேட்டி : **அம்பி ஆசீர்வாதம்**

---

**அடுத்த பேட்டி : வழக்கும் வாதமும்**

# 007 பாலு

கதை: குமரன் — 18 — படம்: விஜயா

பம்பாய் விமான நிலையத்தில் மகாராஷ்டிர உயர் போலீஸ் அதிகாரி விக்ரம் பார்த்தனைச் சந்தித்தார்.

ஹலோ! டெலிபோன் தொடர்பு சீக்கிரம் கிடைத்திருந்தால் நம் வேலை இலகுவாகி இருக்கும். ஆனால் இரவுதான் உங்களுடன் பேச முடிந்தது.....

... பம்பாயில் சுரேஷைத் தவிர பாலுவுக்கு வேறு யாரையும் தெரியாது. ஆகவே அங்கேதான் போவான். விலாசம் இருக்கிறது. கிளம்புங்கள்.

நில்லுங்கள்! என்ன அவசரம்?.....

... பாலு சந்திரனைக் கண்காணித்ததுபோல அந்தக் கொள்ளைக் கூட்டத்தினரும் பாலுவைக் கவனித்து வருவார்கள். நாம் பாலுவைச் சந்தித்தால் அவர்கள் உஷாராகி, இருந்த இடம் தெரியாமல் மறைந்தே விடுவார்கள். அப்புறம் அவர்களைப் பிடிக்கவே முடியாது.

பின் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?

பாலு நம்மை அவர்களிடம் எப்படியும் அழைத்துப்போவான். அவனுக்குத் தெரியாமல் அவனை நாம் கவனித்து வந்தால் போதும்.

விக்ரம்! நீங்கள் அந்தப் பாலகனுடைய உயிருடன் விளையாடுகிறீர்கள்!

அவனுக்கு ஒரு ஆபத்தும் வராதிருக்கத்தான் நாம் அங்கே சேர்ந்தே இருப்போமே!

பார்த்தன் அரைமனத்துடன் சம்மதித்தார்.

இதற்கிடையில்.... சந்திரனும், ஜாக்கியும், ராணியும் (லலிதா) ராஜாவின் முன் நின்றனர்.



ராஜா! கல்கத்தா பாங்கில் கொள்ளை அடிக்கப்பட்ட பணம் இதோ. இது நேரே இங்கே வருவதை விடப் பல கை மாறிச் சென்னை வந்து பிறகு அதை நான் இங்கு கொண்டு வந்தால், மோப்பம் பிடித்துத் துரத்தி வரும் போலீசார் இடையில் எங்காவது ஏமாந்து விடுவார்கள் அல்லவா.....


சரி/சரி/வந்த 'ஐடியா' வெல்லாம் என்னுடையது தான். எனக்கே பாடம் சொல்லித் தர வேண்டாம் நீ! ஒரு சின்னப் பயல் உங்களை ஏமாற்றி இந்தக் கோட்டையை நோட்டம் பார்த்துக் கொண்டு போய் விட்டானே! அதுக்கு என்ன சொல்றே! இடியட்! கழுதை!


ராஜா! அதுக்காகக் கவலைப் பட வேண்டாம். இங்கிருந்து கிளம்பிய பாபுவைப் பின் தொடர்ந்து போனான் நம்ப ஆள் நெம்பர் ஏழு! என் ஏற்பாடுதான். தன் நண்பன் சுரேஷ் வீட்டில் பாபு தங்கு-கிறான்.
பாபுவை இனி உயிருடன் விட்டு வைப்பது ஆபத்து......


...இந்த மாளிகையை உன்னி உன்னி ஆராய்ந்தான் பாபு. என்னையும் சந்தேகிக்கிறான். மேலும் மேலும் நிச்சயம் தொல்லை தரக் கூடியவன்.
கரெக்ட்! ஜாக்கி! பாபுவைப் பரலோகத்துக்கு அனுப்பணும். ஜோக்கருக்குச் சொல்லி ஏற்பாடு பண்ணி விடு!


பாபுவைச் சுலபமாக அவன் இந்த வீட்டில் தனியாக நுழைந்த போது தீர்த்துக் கட்டியிருக்கலாமே!
முட்டாள்! யோசனை பண்ணு! கொலை ரொம்ப அசிங்கம். அதோடு உடலை என்ன செய்வது என்கிற பிரச்னை வேறு. பாபு ஒரு விபத்தில் மரண மடைந்தால் நமக்கு ஒரு தொல்லையும் இல்லை!


ஓகே பாஸ்! அதை நான் கவனிச்சுக் கிறேன். குட் நைட்!
குட் நைட்!
சந்திரனும் ஜாக்கியும் வண்ணப் படம் போல் தோன்றிய ரகசியக் கதவை ஒரு விசையை அழுத்தித் திறந்தார்கள்.


இப்பால் அவர்கள் அடியெடுத்து வைத்தது, நடிகை ஸரிதாவின்- அதாவது ராணியின் இருப்பிடம். இந்த வீட்டை தான் சுற்றிச் சுற்றி வந்தான் பாபு! ஆனால் இந்தப் பக்கத்தில் புத்தக அலமாரி போல் தோன்றும் ரகசியக் கதவுக்கு பின்னால் ராஜாவின் மர்ம உலகம் இருக்கிறது என்பதை உணரவில்லையே அவன்!
தொடரும்....

# ஓட்டம், ஆட்டம், நாட்டம்!

✽ குடியரசு தினம். மத்தியானம் பன்னிரண்டு மணிக்கே கொளுத்தும் வெய்யிலைப் பொருட் படுத்தாமல், தங்கள் மனைவிமார் குழந் தைகள் சகிதம் ஹாக்பீல்டு மைதானத்தை முற்றுகையிட் டிருந்தார்கள், பி. அண்ட் ஸி. மில் தொழிலாளர்கள். பல்லாயிரக் கணக்கானவர்கள் இப்படிக் குழுமி யிருந்ததற்குக் காரணம், ஓட்டத்தி லும், ஆட்டத்திலும் அவர்கள் கொண்டிருந்த நாட்டம்தான்! ஹாக் பீல்டு மைதானம் அழகாக அலங்கரிக் கப்பட்டுத் திருநாள் கோலம் பூண் டிருந்தது. போலீஸ் பாண்டு இசைக் கேற்பக் காவல் படையினரும், செயின்ட் ஜான் ஆம்புலன்ஸ் குழுவி னரும், தீப்படையினரும் முன் செல்ல,





விளையாட்டு வீரர்கள் வீர நடை பயின்றார்கள். காவல் படையைச் சேர்ந்த இரு போலீஸ் நாய்களும் வாலைக் குழைத்துக் கொண்டு பவனி வந்தன. பி. அண்டு ஸி. மில்ஸ் சேர்மன் ஜாபர்ஸ் இந்த மரியாதை அணிவகுப்பை ஏற்றுக் கொண்டார்.

✽ ''அடி! உதை! விடாதே!''

''என்னய்யா, சண்டையைக் கிளப்பறே!''

''நான் சண்டையைக் கிளப் பலே, ஐயா! அங்கே சண்டை நடக்குது பாரு!''

''வீட்டுச் சண்டை மைதானத்துக்கும் வந்து விட்டதா?''

''இது வேறே சண்டை! இரண்டு பேர் என்னமா தலையணைகளினாலே மோதிக் கீழே தள்ளறாங்க, பாருங்க!''

''நம்ம வீட்டுப் பெண்களுக்கு இது புதிசில்லே! இன்னொரு பக்கம் சாக்குக் கட்டிக்கிட்டு மோத றாங்க, பாருங்க!''

''டக் ஆப் வார் சண்டை வேறு நடக்குது! வாட்ச்மேன் கோஷ்டிதான் ஜெயிச்சது. எப்ப வும் அவங்கதான்ஜெயிப்பாங்க!''

''இங்கே வந்தும் சண்டைக் காட்சிகளைத்தானா பார்க்கணும்? வேறே நல்ல ஓட்டங்களைப் பாருங்களேன்!'' என்றாள் ஒரு தொழிலாளியின்மனைவி.

''நயினா! ஓடறவங்களுக் குத்தானே பரிசு கொடுப் பாங்க! ஓடாதவங்களுக்கும் பரிசு உண்டுன்னு சொன்னியே, எப்ப கொடுப்பாங்க?'' என்று வினவினான் சிறுவன்.

''நாம நுழையும்போது லாட்டரிப் பெட்டியிலே அதிர்ஷ்டப் பரிசுக் கூப்பனைப் போட்டோம்லே? அந்தச் சீட்டுக்களைக் குலுக்குவாங்க. சைக் கிளு, டிரான்ஸிஸ்டர், ரேடியோ





மேலே: மில் மானே ஜர் திரு ராமமூர்த்தி.

சேர்மன் ஜாபர்ஸ், டைரக்டர் பட்டும், விளை யாட்டுக் குழுத் தலைவர் திரு ரமணியும் பின் தொடர வருகிறார்.

அபிநயம் பிடித்த நந்தினி குல்கர்னி.

கீழே: ஸ்ரீமதி ஜாபர்ஸ். 2. சேர்மன் ஜாபர்ஸ். 3. விளையாட்டுக் குழுத் தலைவர் திரு கே. எஸ். ரமணி.

எல்லாம் கொடுக்கப் போறாங்க!'' என்றார் சிறுவனின் தந்தை.

✲ ஒரு சிறுவன் அழுதுகொண்டே ஓடுகிறான். அவனைச் சமாதானப்படுத்தும் நோக்கத்துடன் வாலண்டியர், ''ஏண்டா, தம்பி! அழறே?'' என்கிறார் அன்போடு.

''என் அப்பா மாணிக்கம் கூட்டத்திலே காணாமப் போயிட்டாரு! அவரைப் பிடிக்கக் கொடுக்கணும்... ஊம்...!''

''வா! மைக்கிலே சொல்லச் சொல்றேன்... ஸார்! இந்தப் பையனின் அப்பா மாணிக்கம் காணாமல் போயிட்டாராம். அழுதுக்கிட்டிருக்கான். கொஞ்சம் மைக்கிலே சொல்லுங்க!''

மைக் அறிவிப்பு: ''மாணிக்கம்! நீ எங்கே இருந்தாலும் ஓடி வருக! உன் பையன் உனக்காக அழுதுக்கிட்டிருக்கான்!''

பையன் அழுவது போதாதென்று அறிவிப்பாளர் வேறு அழுது வழிகிறார்!

✲ ''பி. அண்ட் ஸி. மில்ஸ் சாம்பியன்ஷிப் பரிசு யாருக்குக் கிடைத்தது?''

''மானேஜர் ஆபீஸ்காரங்களும் இன்ஜினியரிங் இலாகாவினரும் பங்கு போட்டுக்கிட்டாங்க!''

''பி. கே. வேணுகோபால்தான் தனிநபர் சாம்பியன்! அதோ ஸ்ரீமதி ஜாபர்லிடம் அவர் கோப்பையை வாங்கிக் கொள்கிறார்.''

''அவரு ஓட்டப் பந்தயத்திலே ஜெயிச்சாரு. நம்ம அதிர்ஷ்டப் பரிசைச் சொல்லுங்க!''

''இதோ அதிர்ஷ்டச் சீட்டுகள் நிரம்பிய டிரம் சுழலுகிறது. முதல் பரிசு சைக்கிள் போச்சு! இரண்டாம் பரிசு ரேடியோவும் யாருக்கோ போச்சு! மூன்றும் பரிசு டிரான்ஸிஸ்டரும் போச்சு!... நமக்கு ஒண்ணும் இல்லையே?''

''என்னோட அதிர்ஷ்டக் கையாலே லாட்டரிப் பெட்டியிலே சீட்டை நான் போடறேன்னு சொன்னேன், கேட்டீங்களா?''

''அதோ பாரு, அடுத்த வீட்டுக் கனமான ஆசாமி முனுசாமி தலைக்கு மேலே ஸ்டவ் அடுப்பைத் தூக்கிக்கிட்டுப் போறாரு! நூறு பரிசுகள் இருக்கு. ஏதாவது நமக்கு விழாமலா போகும்?''

''ஒரு மண்ணும் விழாது. வாங்க போகலாம்.''

''இதோ நீ வண்ணுன்னு விழுந்திட்டியே, போதாதா?''

''நம்ம அதிர்ஷ்டம் நமக்குத் தெரிந்தது தானே? வீட்டுக்குப் போகலாம்!''

''அதுக்குள்ளேயா? நகரும் மேடையிலே பரத நாட்டியம், நாடகம் எல்லாம் நடக்கப் போகுது!''

✲ குமாரி நந்தினி குல்கர்ணி நகரும் மேடையில் இரு பதங்களுக்கு அபிநயம் பிடித்தார். பூனை, நாய், கிளி இவற்றைப்போல் ஏ. ஜார்ஜ் கத்திக் காட்டினார். தேவசகாயம் மாஜிக் வித்தைகளைக் காட்டி மயக்க வைத்தார். அதிகாரிகளின் குழந்தைகளும் நிகழ்ச்சிகளில் பங்கு பற்றின. அழகான ஆங்கில நாடகத்தை நடித்துக் காட்டிப் பாராட்டைப் பெற்றனர். பணிப்பெண்ணாக நடித்த சுசீலா மாத்ரே அழுது அழுது குதித்தே அத்தனை பேரையும் அயர வைத்து விட்டார்! 'எப்படி வாழ்வது?' என்பது மில் தொழிலாளர்கள் நடத்திய நாடகம். கொளுத்தும் வெய்யிலில் ஆரம்பித்த விழா, விடாது கொட்டும் பனியிலும் நீடித்தது. குளிரைப் பொருட்படுத்தாது வெட்ட வெளியில் நாடகத்தைக் கண்டு களித்தனர், தொழிலாளர் மக்கள்.

''இந்த ஒரு நாள் குடியரசு விளையாட்டு விழாவுக்கு ஒரு மாசமா விளையாட்டுக் குழுத் தலைவர் திரு கே. எஸ். ரமணியும் மில் மானேஜர் திரு பி. ஜி. ராமமூர்த்தியும் அவரது சகாக்களும் பாடுபட்டிருக்கிறார்கள்!''

''மில் தொழிலாளர் குடும்பங்கள் முப்பதி னாயிரம் பேரையும் சமாளிப்பது இலேசான காரியமா? பலதடவை மைதானத்திலே அவர்கள் ஊடுருவல் செய்து விட்டார்களே! அவர்களை விளையாட்டு நிர்வாகிகள் ஓடி ஓடி நிர்வகித்ததற்கு அவர்களுக்கும் பரிசு கொடுத்திருக்கலாம்!''

இந்த வெற்றிகரமான விளையாட்டு விழா அவர்கள் ஏற்கும் பரிசுதானே? — **குண்டுமணி**





மேலே: அறிவிப்பாளர் தோதாத்ரி.

'எப்படி வாழ்வது?' நாடகத்தில் மில் தொழிலாளி.

இடை: ஆங்கில நாடகத்தில் சுசீலா மாத்ரே.

ஓட்டத்தில் ஒரு காட்சி.

மார்கோ சோப் மட்டுமே, தூய்மையோடு
பல நன்மைகளும் செய்கிறது. குளிர்காலத்திலும்
கோடைகாலத்திலும் சருமத்தை ஒன்றுபோல்
இசையச்செய்கிறது அது!

# காரணம், மார்கோவில் மட்டுமே வேப்பெண்ணெய் உள்ளது






மார்கோ சோப்பின் செழுமையான நுரையில் வேப்பெண்ணெய் நிறைந்துள்ளது. அது சருமத்தை இளக்கிக் கொடுத்துப் பராமரிக்கிறது. வேம்பின் கிருமியழிக்கும் தன்மை தொற்று நோய் அண்டாமல் காக்கிறது. மார்கோ உங்கள் சருமத்தை எந்தக் காலநிலையிலும் மிருதுவாகவும், மழுமழுப்பாகவும், மாசற்றதாகவும் விளங்கச்செய்கிறது. துர்நாற்றத்தைப் போக்கும் வேப்பெண்ணை மார்கோவில் கலந்துள்ளதால் அது எப்போதும் உங்களை தூய்மையுடன் இருக்கச்செய்கிறது. மென்மையும் நுரைவளமும் மிகுந்த மார்கோ சோப் உங்களுடைய குடும்பத்தினர் யாவருக்கும் சிறந்தது.

## மார்கோ சோப்

சருமம் மிருதுவாகவும்
மென்மையாகவும்
விளங்க!

ஒரு கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

CCM-4183




தயாரிப்பு:
வாண்டுமாமா

29

## யானையைத் தின்ற மான்

ஆதியில் யானையும் புலியும் நண்பர்களாகத்தான் இருந்தன. ஒரு நாள் அவ்விரண்டும் கானகத்தின் வழியாகப் போய்க் கொண்டிருக்கும் போது ஒரு முட்டாள்தனமான பந்தயத்தில் ஈடுபட்டன. அங்கே ஒரு சின்னக் குரங்கு அவைகளின் தலைக்கு மேலேயுள்ள மரக் கிளைகளில் தாவி ஓடிக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தது. அதைப் பார்த்தால் எதற்குமே, யாருக்குமே பயப்படாதது மாதிரித் தோன்றியது. அத்தனை விஷமம்.

"நமக்குள் ஒரு பந்தயம். அதைப் பயப்படும்படி செய்து மரத்திலிருந்து கீழே விழ வைக்க வேண்டும். அப்படிச் செய்ய என்னால் முடியாவிட்டால் நான் உனக்கு உணவாகிவிடுகிறேன். உன்னால் முடியாவிட்டால் நான் உன்னைச் சாப்பிட்டு விடுவேன். சம்மதமா?" என்றது யானை.

"சவாலை ஏற்றுக் கொள்ளுகிறேன். முதலில் நீ முயன்று பார்" என்றது புலி. யானை பிளிறியது பயங்கரமாக. காடே அதிரும்படி அட்டகாசம் செய்து ஆர்ப்பரித்தது. ஆனால் யானையின் பிளிறல் ஆட்டம் ஓட்டம் எதுவும் அந்தச் சின்னக் குரங்கைப் பாதிக்கவே இல்லை.

களைத்துப் போன யானை, "நான் தோற்றுவிட்டேன். எங்கே உன் திறமையைக் காட்டு" என்றது.

புலி ஒரு கர்ஜனை புரிந்தது பயங்கரமாக. அடுத்த விநாடி குரங்கு நடுங்கிப் போய்த் தரையில் 'பொத்'தென்று விழுந்து நினைவிழந்தது. பிறகு எழுந்திருக்கவே இல்லை.

"நீ ஜெயித்து விட்டாய். என் மனைவி குழந்தைகளிடம் விடைபெற்று வர எனக்கு ஒரு வாரம் அவகாசம் கொடு. அதன் பிறகு என்னை நீ உணவாக உட்கொள்ள ஆரம்பிக்கலாம்" என்று கேட்டுக் கொண்டது யானை. புலியும் சம்மதித்தது. வேதனையோடு வீடு திரும்பிய யானையைக் கண்ட மற்ற மிருகங்கள் காரணம் விசாரித்து அறிந்ததும் கண்ணீர்விட்டபடி சென்றன. புலியைப் பகைத்துக் கொள்ள எந்த மிருகம்தான் விரும்பும்?

ஏழாவது நாள். கஸ்தூரி மான் ஒன்று கண் கலங்கி நிற்கும் யானையாரிடம் வந்தது. அதன் கவலைக்குக் காரணத்தைக் கேட்டறிந்து கொண்டதும், "யானையாரே! உம்மை இழக்க நான் விரும்பவில்லை. புலி உம்மைச் சாப்பிடாமல் பயந்து ஓடும்படி செய்ய என்னால் முடியுமென்று நினைக்கிறேன். ஆனால் நான் சொல்கிறபடி நடக்க வேணும்" என்றது.

"என்ன சொன்னாலும் கேட்கிறேன். என் வாழ்நாளெல்லாம் உனக்கு அடிமையாக இருக்கிறேன். என்னைப் புலி வாயிலிருந்து காப்பாற்றினால் சரி" என்று புலம்பியது யானை.

"சுரக் குடுக்கைகள் நிறைய வெல்லப் பாகைக் கொண்டு வந்து உம்முடைய முதுகில் கொட்டப் போகிறேன். அந்தப் பாகு உம் முதுகின் பக்கமெல்லாம் வழிந்து கால்களிலும் ஓடும். நான் உமது முதுகில் ஏறி அமர்ந்து கொண்டு அந்த வெல்லப் பாகை நக்கி ருசிக்க ஆரம்பிப்பேன். நீர் வேதனை தாங்காதவர் போலக் காடே கலங்கப் பிளிறியபடி ஓட வேண்டும். புலி உம்மைச் சாப்பிடுவதாக நினைத்துக் கொள்ளுங்கள். அப்போது நான் குறிப்பிட்டபடி கத்திக் கொண்டு ஓடுவது சுலபமாக இருக்கும்" என்றது மான். யானையும் ஒப்புக்கொண்டது. வெல்லப்பாகு கொண்டு வரப்பட்டு யானையின் முதுகில் கொட்டப்பட்டது. அதன்பின் எல்லாமே திட்டமிட்டபடி நடந்தன. பீதியினால் பிளிறியபடி யானை ஓடக் காடே கலங்கியது. அப்போது புலி எதிர்ப்பட்டது. புலியைக் கண்ட கஸ்தூரி



மான் தன் நாக்கைச் சப்புக் கொட்டியபடி ''ஓ!, புலியாரா? வாங்க, வாங்க. என் பசிக்கு ஒரு யானை எம் மாத்திரம்? உம்மைப் போன்றதொரு கொழுத்த புலி கிடைத்தால் ஏதோ கால் வயிறுவது நிரம்பும்... இரு.... இரு.... இதோ வருகிறேன்.....'' என்றது.

வெப்பான திரவம் யானையின் முதுகிலிருந்து பெருகி வழிவதையும் யானை பீதி கொண்டு ஓடுவதையும், மானின் பேச்சையும் கேட்ட புலி அரண்டு மிரண்டு தப்பினால் போதும் என்று ஓட ஆரம்பித்தது. வெகு தூரம் ஓடிய பிறகு மூச்சு இறைக்கச் சற்றுத் தாமதித்தபோது ஒரு மனிதக் குரங்கு எதிர்ப்பட்டது. புலியின் பயத்துக்கும் ஓட்டத்துக்கும் காரணத்தைக் கேட்டது. மான் மனிதக் குரங்கிடம் கண்ட காட்சியை விவரித்தது. மனிதக் குரங்கு சிரி சிரி என்று சிரித்து விட்டு, ''புலியாரே! உமது கிலியில் நீர் சரியாகப் பார்க்கவில்லையா? யானையின் முதுகின் மீதுள்ளது கோர மிருகம் இல்லை. கஸ்தூரி மான் ஐயா!'' என்றது.

''கஸ்தூரி மானை எனக்குத் தெரியாதா என்ன? என் சுவைமிக்க உணவாயிற்றே அது. தவிர மான்கள் மாமிசம் சாப்பிடுமா என்ன? அது மானல்ல'' என்று அடித்துப் பேசியது அதிர்ச்சி வயப்பட்டிருந்த புலி.

''சரி, என்னோடு வா. உன்னைக் காப்பாற்ற நான் ஆயிற்று. அது மான் இல்லை என்றால் வேறு என்ன என்பதைப் பார்த்து விடலாம்'' என்று கூறிப் புலியை அழைத்துக் கொண்டு கிளம்பியது குரங்கு.

யானையின் முதுகில் இருந்தபடி வெல்லப் பாகைச் சுவைத்துக் கொண்டிருந்த மான் புலியும் மனிதக் குரங்கும் வருவதைக் கண்டதும் ஒருவாறு நிலைமையை யூகித்துக்கொண்டு, ''மனிதக் குரங்காரே! வாரும், வாரும். இந்த ஏமாற்று வேலையெல்லாம் என்னிடம் வேண்டாம். நமக்குள்ளே செய்து கொண்ட ஒப்பந்தம் என்ன? நான் யானையைச் சாப்பிட்டு முடிப்பதற்குள் நீர் இரண்டு புலிகளை என் பசிக்கு உணவாகக் கொண்டு வருவதாகக் கூறிவிட்டு ஒரு புலியை மட்டும் கூட்டி வந்தால் என்ன அர்த்தம்?'' என்றது.

அவ்வளவுதான். இதைக் கேட்ட புலி, ''குரங்கே! அந்தக் கொடிய பிராணியின் பசிக்கு என்னைப் பலியிடவா ஏமாற்றி அழைத்து வந்தாய்? இரு, இரு! உன்னைப் பின்னால் பேசிக் கொள்கிறேன்'' என்றது. தப்பினோம் பிழைத்தோம் என்று புலி மறுபடியும் திரும்பிப் பார்க்காமல் எடுத்தது ஓட்டம். அது நிற்கவே இல்லையாம். இன்னும் ஓடிக்கொண்டே இருப்பதாகக் கேள்வி!



## இது என்ன?

வியாதிகளைக் குணப்படுத்தும் திபேத் தியக்கடவுளின் சிலை. திறந்த இதன்வாயில் மருந்துகளை நிரப்புவர். நோயாளி அதன் வாயிலிருந்து அப்படியே மருந்தை உறிஞ்சிக் குடிப்பான். தீராத வியாதிகளெல்லாம் குணமாகி விடுமாம்.

## விந்தை யல்லவோ...!

வங்காளத்தில் முஹமத்பூர் என்ற ஊரில் ஒரு செயற்கை ஏரி உள்ளது. அதன் அடியில் எங்கோ ஓரிடத்தில் அமைந்துள்ள ரகசிய அறைக்குள் எண்ணிப் பார்க்க முடியாத அளவுக்குச் செல்வம்—நகைகளும் நாணயமுமாகப் புதையுண்டிருக்கிறதாம். இத்தனை பொக்கிஷம் அங்கு எப்படி, யாரால் மறைத்து வைக்கப்பட்டது? 1699லிருந்து 1712வரை அந்தப் பகுதியை ஆண்ட ராஜா சீதாராமராய் என்பவரின் பொக்கிஷம்தான் இது. இவர் தம் அளவிட முடியாத செல்வத்தை நீருக்கு அடியிலே ஒளித்து வைத்துப் பாதுகாக்கத் திட்டமிட்டார். அதற்காக ஒரு செயற்கை ஏரியை உண்டாக்கினார். அதன் அடியில் ஒரு ரகசியக் கிடங்கையும் ஏற்படுத்தினார். அதற்குள் குதித்து மூழ்கிப் பொருளை வைக்கவும் எடுக்கவும் இரண்டு நீர் மூழ்கிகளையும் நியமித்தார். அவ்விருவர், அரசர் —ஆக மூவருக்கே அந்த ரகசிய இடம் தெரியும்.

இந்த நிலையில் 1712ல் ஜாபர்கான் வங்காள அதிபதி சீதாராமராயின் செல்வங்களைக் கொள்ளையடித்துச் செல்லத் திட்டமிட்டான். அதன் பலன் படையெடுப்பு. செய்தியறிந்த ராய் தம் நீர்மூழ்கிகள் இருவரையும் கொலை செய்துவிட்டார். தோல்வி கண்ட ராயை ஜாபர்கான் கொன்றான். ஆனால் ராயின் புதையலைக் கைப்பற்ற முடியவில்லை. ராயோடு அதன் இருப்பிட ரகசியமும் மாண்டது. அன்றிலிருந்து இன்றுவரை அந்த ஏரிக்குள் மூழ்கிக் கிடக்கும் புதையலைக் கைப்பற்றப் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. பலன் ஏதுமில்லை. ஏரியை வற்ற அடித்துப் புதையலைப் பெற முடியாதா? முடியவே இல்லை. அடியில் பல இயற்கை நீரூற்றுக்கள் இருக்கின்றன. தண்ணீரை எத்தனை வேகமாக இறைத்தாலும் அத்தனை வேகத்தில் அது நிரம்பி விடுகிறது. இந்தப் புதையல்ஏரி விந்தை யல்லவோ?



## அத்தியாயம் பதினெட்டு

# 'அவனா இவன்?'

ரட்சகன் தன் கைக் கடிகாரத்தில் மணி பார்த்துவிட்டு விரலைச் சொடுக்கியபடி, ''அடடே! மணி ஏழாயிடுத்தே! இனிமேல் போய்த் தியேட்டர் மானேஜரைப் பிடிச்சுத் தேதி வாங்கணும்; சின்காரனுக்கு அட்வான்ஸ் கொடுக்கணும்; மியூஸிக் பார்ட்டிக்கு அரேஞ்சு பண்ணணும்!.. சரி; நாங்க புறப்படட்டுமா வந்தனா? அம்மாகிட்ட அட்வான்ஸ் கொடுத்துட்டேன். அப்பாகிட்ட கால்ஷீட் வாங்கிட்டேன். இன்னும் ரெண்டொரு நாளிலே டயலாக் ஸ்கிரிப்ட் கொண்டு வந்து தரேன். நல்லா பாடம் பண்ணி வைச்சுக்க. ரிஹர்சலுக்கு வர டாக்ஸி அனுப்பறேன். தவறாமல் வந்துவிடு. இந்த நாடகத்தைப் போட்டு மெட்ராஸையே ஒரு கலக்குக் கலக்கிப்பிடுவோம்'' என்று உற்சாகப் பரபரப்புடன் சொல்லிக் கொண்டே, திரும்பி, ''சார்!'' என்றான்.

''ஓ... புறப்படலாமே!'' என்றவாறு எழுந்த முத்துசிவன் வந்தனாவைப் பார்த்து, 'வரட்டுமா?' என்பது போல் தலையாட்டினான்.

'போக வேண்டாம்' என்று சொல்வது மாதிரி கண்களால் வெகு அழகாக அபிநயித்த வந்தனா, தான் ஏதோ பெரிய தமாஷ் பண்ணிவிட்டாற் போல் கலீரெனச் சிரித்தாள். முத்துசிவன் அவளையே சில விநாடிகள் கூர்ந்து பார்த்துவிட்டு எதையோ புரிந்து கொண்டவன் போன்று மந்தகாச இளநகையுடன் மெல்லத் திரும்பி நடந்தான்.

''சார், ஒன் மினிட் ப்ளீஸ்!'' என்று அவசரமாகச் சொல்லிக் கொண்டே பக்கத்து அறையை நோக்கி விரைந்து சென்ற ரட்சகன், அவ்வறை வாசலில் தொங்கிய திரையை வேகமாக விலக்கினான்.

அங்கே ஒரு கட்டிலில் கோகிலாம்பாள் படுத்து 'ஹா, ஹா' என்று முனகிக் கொண்டிருக்க, அவளருகில் வேட்டியும் பனியனுமாய் நரைத்த தலையுடன் அமைதியே வடிவாகக் காணப்பட்ட ஒரு பெரியவர் குனிந்து அவளுடைய கை, கால்களைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தார்.

''நான் போயிட்டு வரட்டுமாம்மா?'' என்றான் ரட்சகன்.

''வாங்க தம்பி!'' என்று எழுந்திருக்காமலே பதிலிறுத்த கோகிலாம்பாள் மறுபடியும் முனகத் தொடங்கிவிட்டாள்.



இந்தக் காட்சியைக் கண்ட முத்துசிவனின் மனத்தில் அநுதாப உணர்ச்சியும் வெறுப்புணர்ச்சியும் மாறி மாறிப் பொங்கின. ஆனல் இவை இரண்டுக்குமே இடம் கொடுக்க விரும்பாதவன் போல் அங்கிருந்து சரேலென வெளியே போய்த் தன் ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தஅவன், ரட்சகனும் ஓடி வந்து பின்னல் உட்கார்ந்து கொள்ளவே, விரைவாகச் செலுத்திச் சென்றுன்.

''இப்ப எங்கே ஸார் போறீங்க? வீட்டுக்குத் தானே?''

''இல்லே; ஹோட்டலுக்குப் போறேம்.''

''நானும் அதான் நினேச்சேன்! ஆனல் உங்களேக் கூப்பிடத் தைரியம் வரலே. இப்ப நீங்க ரொம்ப ரொம்ப...''

ரட்சகன் தன் மோவாயால் முத்துசிவனின் முதுகில் இடித்துச் சிரித்தான்.

ஒரு பெரிய ஹோட்டலண்டை ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு இருவரும் உள்ளே சென்றனர்.

''ஏனப்பா, ரட்சகா! என்ன இன்றைக்கு என்னே இப்படித் திக்குமுக்காட வைச்சுட்டே?'' என்று 'நாப்கி'னல் கையையும் வாயையும் துடைத்துக் கொண்டே பெரியதோர் ஏப்பம்விட்டவாறு நாற்காலியில் சாய்ந்தான் முத்துசிவன்.

எல்லாம் உயர் தரத்துக்கு உயர் தரமாக இருந்த உணவுக் குவியலில் 'புகுந்து' நொறுக்கித் தள்ளிக் கொண்டிருந்த ரட்சகன் திடுக்குற்று நிமிர்ந்து, ''என்ன சார்?'' என்றுன் அவசரமாக.

''உன் ஹீரோயினேப் பற்றிச் சொல்கிறேன்.''

இன்னமும் திகைப்பு நீங்காதவனுய்க் கையிலிருந்த கத்தியையும் முள் கரண்டியையும் தட்டில் குறுக்காக வைத்து விட்டு, ''என்ன சொல்றீங்க சார்?'' என்று மிகவும் அக்கறையோடு வினவினன்.

''ஆமாம்பா! அந்த வந்தனுவைப் பற்றி நான் ஏதோ பெரிதாகக் கற்பனே பண்ணிக்கிட்டிருந்தேன். அதிலே ஒண்ணு கூடச் சரிப்பட்டு வரலே.''

''ஓ,....அதுவா?'' என்று வாயில் எதையோ வைத்துக் கொண்டு குழறிய ரட்சகன், ஆப்பிள் ஜூஸில் ஒரு மிடறு குடித்துத் தொண்டையைச் சலவை பண்ணிக் கொண்ட பின், ''நீங்க அப்படி என்ன நினேச்சீங்க?'' என்றுன் சிரித்தவாறு.

''உன் நாடக மன்ற அங்கத்தினர்களிலே அநேகம் பேர் படிப்பிலும் உத்தியோகத்திலும் அந்தஸ்திலும் உயர்ந்தவங்களாயிருக்கிறுங்க இல்லேயா? அதே போல அந்தப் பெண்ணும் நல்ல வசதியான குடும்பத்திலே பிறந்து, படிச்சு, அரசாங்கத்திலோ, பிரைவேட் கன்ஸர்னிலோ ஏதேனும் கௌரவமான உத்தியோகம் பார்க்கிறவளாக இருப்பாள்னு எண்ணினேன். ஆனல் அவளோ....?''

''நடிக்கிறதையே தொழிலாகக் கொண்ட அசல் நாடகக்காரியாயிருக்கிறுளேன்னு அசந்துட்டீங்களா?'' என்று கேட்டுக் குறும்பாகச் சிரித்தான் ரட்சகன்.

''அமெச்சூர் நாடகங்களில் நடிக்கிற நடிகைகள் அநேகமாகத் தொழில் நடிகைகளாகத்தான் இருப்பாங்க சார்! ஆபீஸிலே வேலே பார்க்கிற, அல்லது காலேஜ் படிக்கிற பெண்கள் அவ்வளவாக வருகிறதில்லே. வந்தாலும் எடுபடுகிறதில்லே. இவங்களிலே நடிக்கிறதுக்கு ஆசைப்படறவங்க கூட நாடகத்தில் நடிக்க வரமாட்டாங்க; சினிமா சான்ஸ் கிடைச்சா குதிச்சுக்கிட்டுப் போவாங்க. இதுவும் தவிர அமெச்சூர் நடிகர்களுக்குத் தொழில் நடிகைகளோடு நடிக்கிறதிலேதான் படு குஷி. அமெச்சூர் நடிகைகளேப்போட்டால் அவர்களுக்கு 'மூடே' வராது. இதை யெல்லாம் காரண காரியங்களோடு விளக்



இச் சொன்னால் கேட்க ரொம்ப ருசியாயிருக்கும். ஆனால் அந்த ருசி, இப்ப நாம் சாப்பிட்டுக்கிட்டு இருக்கிற இந்த அருமையான உணவு வகைகளின் ருசிகளைக் கெடுத்து விடும். அதனால் அதை விட்டு விட்டு விஷயத்துக்கு வரேன்!...ஆமாம்! நீங்க என்ன சொன்னீங்க? அந்த வந்தனு நடிக்கிறதையே தொழிலாகக் கொண்ட அசல் நடிகைன்னு நினைச்சுட்டீங்க?''

''பின்னே அப்படி இல்லையா?'' என்று தன்னை மீறிய ஆவலுடன் கேட்டான் முத்துசிவன்.

''அவள் நடிகைதான் சார்! ஆனால் நடிப்பையே தொழிலாகக் கொண்டவள்னு சொல்ல முடியாது; அது இல்லைன்னும் முழுக்க மறுத்துவிட முடியாது.''

''என்னப்பா, உளர்றே?'' என்று சிரித்தான் முத்துசிவன்.

''ஆமாம், சார்! அந்தப் பெண்ணோட விஷயம் ஒரு தனி ரகமானது; அதைச் சொல்லட்டுமா, வேணுமா?''

அவளைப்பற்றி அறிய வேண்டுமென்ற ஆவலில் வெகு நேரமாகவே உள்ளூறத் துறுதுறுத்துக் கொண்டிருந்த முத்துசிவன், அந்த ஆவல் உணர்ச்சியை வெளிக் காட்டிக்கொள்ளாமல் ''சொல்லேன், கேட்போம்!'' என்றான் ஒரு போலியான கேலிக் குரலில்.

கண்ணாடிக் கிண்ணத்திலிருந்த பீச் மெல்பா ஐஸ்கிரீமைச் சுவைத்தவாறு ரட்சகன் சொன்னான்: ''நீங்க கேட்க நீங்களேங்கிறதுக்காகச் சொல்றேன், சார்! அந்தப் பெண்ணோட அப்பா பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவர். ஒரு பிரபலமான கம்பெனியில் ஆடிட்டராக வேலை பார்த்தவர். இப்போ வயசாகி விட்டதால் வேலையிலிருந்து ரிடையராகிவிட்டார். ஆனாலும் தனிப்பட்ட முறையிலே சின்னச் சின்ன கம்பெனிகளின் கணக்கு வழக்குகளைக் கவனிச்சுக்கிறார். இதிலே அவருக்கு மாசம் அறுநூறு, எழுநூறுக்கு மேல் வரும்படி வரது. அவரோட அப்பா அம்மா பார்த்துக் கல்யாணம் பண்ணி வைச்ச பெண்ணோட அவர் மூணு வருஷம்தான் குடித்தனம் நடத்தினாராம். அப்புறம் எப்படியோ அவருக்கு இந்தக் கோகிலாம்பாளுடன் தொடர்பு ஏற்பட்டுப் போச்சு. அவள் அந்தக் காலத்திலே ஒரு நாடக நடிகையாக



கோத்ரெஜ்
அளிக்கும்
புதிய பூட்டு
# லாமினா

கோத்ரெஜ் அளிக்கும் புதியபூட்டு லாமினா. நேர்த்தியான வடிவமைப்பை உடைய இப்பூட்டு, அதன் விலையில் கிடைக்கிற பூட்டுகளில் மிகச் சிறந்தது. பூட்டுக்களைத் தயாரிப்பதில் 70 வருடங்களுக்கும் மேலான அனுபவமுடைய கோத்ரெஜ் கம்பெனியாரால் தயாரிக்கப் பட்டது; லாமினேடெட் எஃகினால் உருவானது; குரோமியம் பூசிய ஷாக்கிள் (தளை) மற்றும் ஆறு லீவர்களைக் கொண்டது.




Godrej

எப்போதும் நங்கூரம் மார்க் கேட்டு வாங்குங்கள்.

ULKA-GBL.1 A TM

இருந்தவன். கோர்ட், பஞ்சாயத்து என்று ஏதேதோ வழக்குத் தகராறெல்லாம் நடந்து, கடைசியில் அவர் அவளுடனேயே குடும்பம் நடத்த ஆரம்பிச்சார். இதனால் அவருடைய குடும்பத்தார் அவரை முழுக்கவும் ஒதுக்கி வைச்சுட்டாங்க. இப்பவும் நிலைமை அதுதான்.''

வாயில் சிக்கிக் கொண்ட பீச் பழத் தோலைத் துப்பிவிட்டு மேலும் சொன்னான் ரட்சகன்: ''கோகிலாம்பாள் இவரிடம் வந்து சேர்ந்ததும் நாடகத்திலே நடிக்கிறதை விட்டு விட்டாள். ரொம்ப நல்ல விதமாகவே வாழ்க்கை நடத்திக்கிட்டு வந்தாங்க. இவங்களுக்கு வந்தது ஒரே பெண். அவள் வளர்ந்து தலையெடுத்துப் பெரிய மனுஷியானதும்தான் புருஷன் மனைவிக்குள்ளே தகராறு ஏற்பட்டுச்சு. அப்ப அவள் மெட்ரிக் படிச்சு முடிச்சிருந்தாள். கோகிலாம்பாளுக்குத் தன்னுடைய தொழிலின் மேல் மறுபடியும் ஆசை வந்துவிட்டது. தான் எட்டிப் பிடிக்கக் கொடி நாட்டாமல் பாதியிலே இறங்கி வந்துட்ட நடிப்புக் கலை உலகில் தன் பெண்ணைக் கொண்டு போய் நிறுத்தி அந்தப் புகழ்க் கொடியை ஏற்றிப் பறக்க விடணும் என்கிற பித்து அவளைப் பலமாகப் பிடிச்சுட்டது. ஆனால் தன்னைப் போல் நாடக நடிகையாக்கி விட அவளுக்கு விருப்பமில்லே. காரணம் தெரிஞ்சதுதானே? அதனால் பெண்ணை அழைச்சுக்கிட்டுச் சினிமாக் கம்பெனிப் படிகளில் ஏறி ஏறி இறங்கினாள். சினிமா உலக விஷயம் அவளுக்குத் தெரியலே. உதைச்சா அது உதைக்கிற காலைக் கட்டிப் பிடிச்சு இழுக்கும், முத்தமிடும்; கட்டிப் பிடிக்கப் போனால் கழுதைக் கணைக்கா உதைச்சுத் தள்ளும். ஊசிப் போனதாயிருந்தாலும் மூடி மூடிக் காட்டணும்; அப்பத்தான் அதிலே என்னமோ இருக்குதுன்னு அதை ஓடி ஓடி வந்து மொய்க்கும். திறந்து போட்டுட்டா திரும்பிக்கூடப் பார்க்காது. இதைச் சீக்கிரமே தெரிஞ்சுக்கிட்ட கோகிலாம்பாளுக்கு அந்தக் கொம்புத் தேன் புளிச்சுப் போச்சு. ஆனாலும் அதன் மேல் வைச்ச ஆசை மட்டும் புளிப்புத் தட்டலே. 'கீழேயிருந்து மாடிக்கு ஜம்ப் பண்ண முயற்சி செய்யறதைவிடப் படிக்கட்டு வழியாக ஏறிப் போகப் பார்க்கலாமே'ன்னு பெண்ணை நாடகத்திலே நடிக்க விட்டாள்....''

''அப்ப வந்தது இன்னும் சினிமாவிலே நடிச்சதில்லையா?'' என்று குறுக்கிட்டுக் கேட்டான் முத்துசிவன்.

''ஏதோ ஒரு படத்திலே குரூப் டான்ஸ் ஆடியிருக்கிறாள். அதனால் தான் 'சினிமாப் புகழ் வந்தனா'ன்னு என்னுடைய நாடக போஸ்டர்களிலே பிரமாதமா நான் விளம்பரம் பண்ணுறேன். இது ஒண்ணுக்குத்தான் அந்தப் 'புகழ்' உதவுது. மற்றபடி வேற சினிமா சான்ஸ் எதுவும் அவளுக்குக் கிடைச்சதா எனக்குத் தெரியலே.''

''பின்னே, நாம் அவள் வீட்டிலிருந்தப்ப அவளோட அம்மா என்னமோ புரொடியூஸர் காரைப் போட்டுக்கிட்டு வந்தாருன்னும், ஷூட்டிங்குக்குக் கால்ஷீட் கொடுத்திருக்குதுன்னும் சொன்னாளே?''

''அதெல்லாம் சும்மா ரீல்! உங்களை மாதிரி யாராச்சும் பெரிய மனிதர் வந்தால் அவள் அப்படித்தான் கப்ஸா அடிச்சுப் பாவலா பண்ணுவாள். அவளைப் போல் இருக்கிறவங்களுக்கெல்லாம் அது ஒரு தொத்து நோய்....'' என்று சிரித்த ரட்சகன், ''சரி; விஷயத்தைக் கேளுங்க சார்!'' என்றவாறு தான் முன்னர் சொல்லி நிறுத்தியதைத் தொடர்ந்து சொன்னான்: ''அப்படித் தம் பெண்ணை நடிகையாக்கிற முயற்சியைக் கண்டு அப்பாக்காரர் குமுறிப் பொங்கினார். அவளை இன்னும் கொஞ்சம் படிக்க வைச்சு ஒரு நல்ல இடத்திலே வரன் பார்த்துக் கௌரவமாகக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கணும்னு அவருக்கு ஆசை. மனைவி அதைச் சட்டை பண்ணலே. இதனால் ரெண்டு பேருக்கும் உள்ளுக்குள் ஒரு பெரிய போராட்டமே நடந்து கடைசியில் அப்பா சரணாகதி ஆகிட்டார். அவர் எப்பவுமே அப்படித்தான். கோகிலாம்பாளிடம் அவருடைய ஜம்பம் எதுவும் சாயறதில்லே. வெளியில் அவருக்கு நிறைய மதிப்பு, கௌரவம். வீட்டிலோ, உட்கார் என்றால் உட்காருவார்; எழுந்திரு என்றால் எழுந்திருப்பார். அதிலுள்ள ரகசியம் எனக்குத் தெரியாது. கோகிலாம்பாளுக்கு மட்டுமே அது தெரிந்திருக்கக் கூடியது. இப்ப அவர் தம் பெண்ணைப் பற்றி ஒண்ணும் கவலைப்படறதில்லே. அதன் தலையெழுத்துப்படி நடக்கட்டும்னு விட்டு விட்டார்.''

திடீரென்று தன் உடலை முறுக்கி ஒரு 'ஹம்மிங்' சிரிப்புச் சிரித்த ரட்சகன், ''அடடே, இதைச் சொல்ல மறந்துவிட்டேனே!'' என்றவாறு மீண்டும் நகைத்தான். ''ஆமாம், சார்! கோகிலாம்பாள் தன் பெண்ணைப் பணத்துக்காக நாடகத்திலே நடிக்க வைக்கிறான்னு சொல்ல முடியாது.

கணவரின் சம்பாத்தியமே அவளுக்குப் போதுமானதாயிருக்குது. குடியிருக்கிற வீடும் சொந்தம். ஆனால் தன் பெண் ஒரு நாடகத்தில் நடிக்கிறதுக்குக் கூலியாகக் கிடைக்கிற இருபது, முப்பது ரூபாயை அவள் இருபது முப்பது லட்சங்களாகவே மதிக்கிறாள் என்பது தான் இதிலுள்ள அதிசயமாகும். அந்தச் சுண்டைக்காய்ப் பணத்தை வாங்குகிறதுக்கு அவள் போடுகிற கண்டிஷன், காட்டுகிற கறார், பண்ணுகிற கெடுபிடி — அடேயங்கப்பா! என்னைப் போல் இருக்கிற ஆசாமிகளுக்கே 'சீ, போ'ன்னு ஆகிப்பிடும்!''

இவ்வளவு நேரம் ரட்சகன் சொல்லி வந்ததை வெகு சுவாரசியமாகவும், கவனமாகவும் கேட்டுக் கொண்டிருந்த முத்துசிவன், ஏதோ நினைத்துக் கொண்டவன் போல் சட்டென்று கையை நீட்டி, ''அது போகட்டும்! உன் ஜேபியில் சிகரெட் இருக்குமே, அதை இப்படிக் கொடு!'' என்றான் உரிமை கலந்த அதிகாரக் குரலில்.

திடீரென்று இவ்வாறு கேட்டது ரட்சகனுக்குத் தூக்கிவாரிப் போட்டாற்போல் ஆகியது. ஏனென்றால், முத்துசிவனின் எதிரில் அவன் ஒரு போதும் சிகரெட் குடித்ததில்லை. தனக்கு அந்தப் பழக்கம் உண்டு என்பதைக்கூட எவ்வகையிலும் காட்டிக் கொண்டதில்லை. எனவே, ஒருகணம் திக்கித் திணறிய அவன் கூச்சப் புன்னகை புரிந்தவனாய்த் தன் ஜேபியிலிருந்து ஓர் அழகான சிகரெட் கேஸையும் தீப்பெட்டியையும் எடுத்து மேசையின் மேல் வைத்தான்.

முத்துசிவன் அநாயாசமாகச் சிகரெட்டொன்றை உருவித் தன் உதடுகளில் பொருத்திக் கொண்டு மற்றொரு சிகரெட்டைக் கேஸிலிருந்து சற்றே வெளியில் இழுத்துவிட்டு ரட்சகனிடம் நீட்டினான். பிறகு சிகரெட்டைத் தான் பற்ற வைத்துக் கொண்டு அதே தீக்கொழுந்தில் ரட்சகனும் பற்ற வைத்துக் கொள்ள உதவினான். மறுவிநாடி அவ்விருவர் எதிரிலும் புகை மண்டலம் சூழ்ந்து வளையமிடத் தொடங்கியது. முத்துசிவன் இப்போதுதான் முதல் தடவையாகச் சிகரெட் குடிக்கிறான் என்பது அவன் அதை உபயோகப்படுத்திய விதங்களிலிருந்தே நன்கு நிரூபணமாகியது. அந்த வேடிக்கையைப் பார்த்து உள்ளூறச் சிரித்த ரட்சகன் இன்னமும் தனக்கு ஏற்பட்ட வியப்புத் தீராதவனாய் அவனையே பார்த்துக் கொண்டிருந்தான்.

நாற்காலியில் அண்ணாந்தவாட்டிலே சாய்ந்தவாறு சிகரெட்டை ரசித்துப் புகைத்தபடி ஏதோ சிந்தனையில் இருந்த முத்துசிவன் மெல்ல நிமிர்ந்து உட்கார்ந்து ரட்சகனைக் குறும்பாகப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, ''ஆமாம்; உன்கிட்ட ஒண்ணு கேட்கப் போறேன், ஒளிக்காமல் சொல்வாயா?'' என்றான் அடித்தொண்டையில்.

ரட்சகனுக்கு இப்போது கொஞ்சம் 'குளிர்' விட்டு விட்டது. சிகரெட்டை வேகமாக உறிஞ்சிப் புகையைப் பல சித்திரக் கோணங்களில் ஊதியவாறு, ''என்ன சார்?'' என்று பூஞ்சிரிப்புடன் கேட்டான்.

''உன்னுடைய நாடக ஹீரோயினைப் பற்றி நிறையச் சொன்னாய்; சரி. அதுக்கு மேலே சொல்ல ஒண்ணுமில்லையா?''

''எதுக்கு மேலே சார்?''

''அதாவது, அவளைப் பற்றி!''

''நான் சொன்னதெல்லாம் அவளைப் பற்றித்தானே?''

''அட, நான் அதைக் கேட்கவில்லையப்பா!''

''பின்னே, எதைக் கேட்கிறீங்க?''

''அவள் எப்படீன்னு கேட்கிறேன்.''

''எதை எப்படீன்னு?''

''நீ பெரிய ஆளாச்சே! புரிஞ்சுக்கிட்டும் புரியாத மாதிரி நடிக்கிறே. இல்லையா?'' — கடகடவெனச் சிரித்தான் முத்துசிவன்.

இப்போதுதான் எதையோ புரிந்து கொண்டவன் போல், ''ஓகோ!.... அதுவா?'' என்று புருவங்களை மேல் உயர்த்தித் தலையாட்டிய ரட்சகனும் உரக்கச் சிரித்தான். அவன் அப்படிப் புரிந்து கொண்ட விஷயத்தை வேறு யாராவது கேட்டிருந்தால் முதல் கேள்வியின் போதே புரிந்து கொண்டு விட்டிருப்பான்; முத்துசிவன் கேட்டதாலேயே அதைப் புரிந்துகொள்ள அவனுக்கு இவ்வளவு நேரம் பிடித்தது.

''ஆமாம், ரட்சகா! அதேதான்!'' என்று முத்துசிவன் உற்சாகமாக மேசையின்மேல் ஒரு தட்டுத் தட்டினான்.

''அதைக் கேட்டுத்தானா தெரிஞ்சுக்கணும்? அது அதேதான் சார்!''

''அதாவது.... அப்படித்தானா?''

''வேறே எப்படி இருக்க முடியும்?''

''ரொம்ப மோசமோ?''

''சேச்சே! அவ்வளவு தூரத்துக்குச் சொல்ல முடியாது.''

''எவ்வளவு தூரத்துக்கு?''

''விலைக்கு வாங்கற அளவுக்கு இன்னும் போய் விடவில்லை என்கிறேன். சும்மா ஒரு பரஸ்பர குஷிக்காகப் படியறதோடு சரி.''

''இது உன் சொந்த அனுபவத்திலிருந்து சொல்றதுதானே?'' என்று

# பிரிட்டானியா

# க்ளாக்ஸோ

தேநீர் அருந்தும் வேளையில் உங்கள் குடும்பத்தினருக்கு இனிய சுவையுள்ள க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகளை வழங்கி மகிழ்ச்சி அடையுங்கள்! பிரிட்டானியாவின் க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகள் சிறுவர்களுக்கும் பெரியவர்களுக்கும் புஷ்டி தருகின்ற சிற்றுணவாகும். தேநீர், காபி, குளிர்ந்த பானம் ஆகியவை அருந்துகையில் க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகளை வழங்குங்கள்.




## பிரிட்டானியா பிஸ்கட்டுகள்

பிரிட்டானியா என்றால் உயர்தரத்திற்கு உறுதியான பெயர்

# எந்த மெரிட்

தையல் மெஷினும்

# உங்களுடையதாக ரூ.15/-மட்டுமே

பாக்கி சுலபத் தவணைகளில்.




**அதோடு கூட!**
**மகத்தான அளிப்பாக ஓர்**
**அழகான 'ஓவர்நைட்' பை,**
**ரொக்கப் பணம் கொடுத்து**
**வாங்கிய ஒவ்வொரு**
**தையல் மெஷினுடனும் தருகிறோம்.**

தவிர ரொக்கப்பணம் கொடுத்து
வாங்கிய இதர தயாரிப்புகளின் மீது 5% விசேஷத் தள்ளுபடி.




அருகிலுள்ள ஸிங்கர் கடைக்கோ, அல்லது அனுமதி
பெற்ற வியாபாரியிடமோ விரைந்து செல்க.

ஸிங்கர்- அளிப்பது சிறந்த பொருள்களே.



• ஸிங்கர் கம்பெனியின்
ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்
ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்:
ஸிங்கர் ஸூயிங் மெஷின் கம்பெனி

இந்தச்சலுகை சென்னை நகரத்தை தவிர தமிழ்நாடு முழுவதும்
பிப்ரவரி 28, 1969. தேதிவரை அளிக்கப்படும்.

SM. 235A TM

பளிச்செனக் கேட்டுக் கண் சிமிட்டி நகைத்தான் முத்துசிவன்.

'இவனு இப்படிக் கேட்கிறான்?' என்று ஆச்சரியப்பட்டுப் போன ரட்சகன் உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''இதற்கு நான் பதில் சொன்னால் நம்புவீங்க இல்லையா?'' என்றான் ஒரு கோணல் சிரிப்புடன். இவ்வளவு நேரம் அவனிடமிருந்த பணிவு, மரியாதை ஆகியவற்றுக்குரிய பாவங்களெல்லாம் இப்போது எங்கு போயின என்றே தெரியவில்லை.

''நம்பக்கூடிய பதிலாக இருந்தால் நம்பறேன்.''

காலிக் கண்ணாடிக் கோப்பையிலிருந்த கரண்டியால் மெல்லத் தட்டித் தாளம் போட்டவாறு மிகவும் நிதானமாகச் சொன்னான் ரட்சகன்: ''மிஸ்டர் முத்துசிவன்! நீங்க கேட்ட இந்தக் கேள்வியை வேறு யாராவது கேட்டிருந்தால் அதற்கு நான் சொல்ற பதிலும் வேறுவிதமாக இருந்திருக்கும்.''

அவன் முதன் முறையாகத் தன்னை 'மிஸ்டர் முத்துசிவன்' என்று விளித்ததைக் கேட்டு உள்ளூற மிரட்சியடைந்து போன முத்துசிவன் அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல், ''என்ன சொல்லியிருப்பாயாம்?'' என்றான் ஒரு போலியான அலட்சியத்துடன்.

''கொஞ்சங் கூடத் தயங்காமல், 'ஆமாம்'னு சொல்லியிருப்பேன்!.... அத்தோடு என் கற்பனைக் குதிரையையும் ஓடவிட்டு இஷ்டத்துக்குக் கதை அளந்து, டயலாக்குடன் வர்ணிச்சு, அவ்வளவும் நிஜம்னு நம்பும்படி பிரமாதமாக நடிச்சும் விட்டிருப்பேன்! ஏன் அம்மாதிரி சொல்வேன்னு, என்னுடைய அந்தக் கற்பனையான லீலா விநோதப் பிரதாபங்களைக் கேட்டு மத்தவர்கள் அசந்து போறதையும், ஏங்கித் தவிக்கிறதையும், பொறாமைப்படறதையும் பார்க்கிறதிலே எனக்கு ஒரு குஷி!''

''அப்போ, நீ?....''

''அந்த மாதிரி விவகாரத்துக்கே நான் போறதில்லே மிஸ்டர்! எனக்கென்னமோ அதில் ருசியும் கிடையாது. எப்பேர்ப்பட்ட மேனகாவதாரங்கள் வலிய வந்து மேலே விழுந்து பிறாண்டினாலும் ரொம்ப நைஸா நழுவிப் போய் விடுவேன். இதுக்கு என்ன காரணம்னு கேட்கலாம். அதைச் சொன்னால் நீங்க சிரிப்பீங்க. ஆனால் அதுதான் உண்மை.''

ரட்சகன் தன்னுடைய கட்டுமஸ்தான உடம்பைத் தானே ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துவிட்டுப் பெருமை கலந்த குரலில் மேலும் சொன்னான்:

## ஐந்து மணி நேர அனுபவம்!



மாயூரத்திலிருந்து ஒளம்பிக் காரில் சென்னையை நோக்கி வந்துகொண்டிருந்தார் நண்பர் ஒருவர். திண்டிவனம் வந்து சேர்ந்தபோது மாலை மணி ஏழு. அங்கிருந்து சென்னை எழுபத்தைந்து மைல். ஐந்து மணி நேரம் கழித்து நள்ளிரவில்தான் அவரால் சென்னையை அடைய முடிந்தது. காரில் ஒரு கோளாறும் இல்லை.

அப்படியானால் எழுபத்தைந்து மைலைக் கடக்க ஐந்து மணி நேரமாவானேன்? காரணம் அன்று பிப்ரவரி 4-ம். அமரர் அண்ணாவின் இறுதி யாத்திரை ஊர்வலத்தில் பங்கு பற்ற வந்த லட்சக்கணக்கானோர் லாரிகளில் தங்கள் தங்கள் ஊர்களுக்குத் திரும்பிக்கொண்டிருந்தார்கள்! பிரகாசமான முன் விளக்குகளுடன் ஒன்றன்பின் ஒன்றாக, அலைஅலையாக லாரிகள் எதிரே வந்து கொண்டிருக்கும்போது நண்பர் காரை மணிக்குப் பதினைந்து மைல் வேகத்தை விடக் கூடுதலாக எப்படி ஓட்டிச் செல்லமுடியும்?

''ஆமாம், மிஸ்டர் சிவன்! எனக்கு என் பாடியையும், பர்ஸனலிடியையும் பாதுகாத்துக் கொள்கிறதிலே ரொம்ப அக்கறை. மைனர் ஆட்டம் போட்டால் இதுகள் கெட்டுப் போயிடுமோன்னு பயம். அதனால்தான் அந்த வழிக்கெல்லாம் நான் போறதில்லே. என் முகத்திலே ஒரு சின்ன பரு வந்துட்டாக்கூட ரொம்ப கவலைப்படுவேன். ஹீரோவா நடிக்கிறவனுச்சே! உடம்பும் முகமும் அழகு கெட்டுப் போச்சுன்னு அப்புறம் எப்படி என்னால் நாடகக் கலாதேவிக்குச் சேவை செய்ய முடியும்? எவ்வளவோ செய்யணும்னு துடிச்சுக்கிட்டு இருக்கிறேனே!''

ரட்சகன் சொன்னதை முத்துசிவன் முழுக்க முழுக்க நம்பினான். காரணம், இன்று வந்தவனின் வீட்டில் அவன் கொஞ்சம்கூட விகல்பமில்லாமல் வெகு சகஜமாகவும், அசட்டுத்தனமாகவும்— அதே சமயம் தான் போன காரியத்தில் மட்டுமே குறியாயிருந்து — அவளிடமும் அவளின் தாயாரிடமும் பேசி நடந்து கொண்ட விதம் இந்தக் கூற்றை உறுதிப்படுத்துவதாகவே இருந்தது.

உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் குமுறிக் குலுங்கிச் சிரித்த முத்துசிவன், ''அப்பனே! நீ நிஜமாகவே ஒரு 'பெக்கூலியர்' டைப்தான்!'' என்றான் கிண்டலாக. ரட்சகன் இதற்குப் பதிலேதும் கூறாமல் நமட்டுப் புன்னகை பூத்துக்கொண்டான். **(தொடரும்)**

# அமிர்தாஞ்சனம்



இதமாகவும்
துரிதமாகவும்
ஜலதோஷம் இருமல்
இவைகளைப் போக்கி
நிம்மதியளிக்கிறது



- அமிர்தாஞ்சனம் எந்த விதத்திலும் தீங்கு செய்யாது. வலியுள்ள இடத்தில் சிறிதளவே தடவினால் போதும்.
- அமிர்தாஞ்சனம் வலியைத் துரிதமாகப் போக்குகிறது. ஏனெனில் இதில் சக்தி வாய்ந்த பத்து மருந்துகள் உள்ளன.
- அமிர்தாஞ்சனம் தடவிக் கொண்டால் இதமான நிம்மதியளிக்கிறது. ஏனெனில் இதில் மெந்தால், கற்பூரம் ஆகியவை கலந்துள்ளன.
- அமிர்தாஞ்சனம் சிக்கனமானது. ஏனெனில் ஒரு பாட்டில் மருந்தை வெகுநாட்களுக்கு உபயோகிக்கலாம்.

அமிர்தாஞ்சனம் லிமிடெட்

மதருஸ் . பம்பாய் . கல்கத்தா
புது டில்லி . ஹைதராபாத்




75
வருடங்களுக்கும்
மேலாக
புகழ்வாய்ந்தது.

AMR - 12 Tam

# மாதர் அறம் மாட்சி பெற...

## பாவைப் பற்றி ராஜாஜி

கஸ்தூர்பா மறைந்த சமயத்தில் ராஜாஜி வருத்தமடைந்து கூறியதாவது:

பா ஒரு மகாராணியைப்போல் பிறந்து வளர்ந்தவர். தம்முடைய சலியாத உழைப்பாலும்



சலிப்புத்தன்மையாலும் ஒரு ராணியைவிட மேன்மையான புகழடைந்து விட்டார். பாரதப் பெண்மணிகளுக்குத் திலகம் போல வாழ்ந்தார்.

●

## பஞ்சாங்கம்

ஆகாகான் மாளிகைக்கு வந்த புதிதில் பா, 'ஏகாதசி என்று வருகிறது!' என்று காந்திஜியைக் கேட்டார். சிறைக்குள் பஞ்சாங்கத்தை வரவழைப்பதற்கும் சர்க்கார் அனுமதி தேவை. சர்க்காருடன் கடிதப் போக்குவரத்து நடத்தி அதை வரவழைப்பதற்குச் சில நாட்கள் ஆகும் என்பதால், தாற்காலிகமாக ஒரு குறிப்பைத் தயாரிக்கும்படி சுசீலா பஹனிடம் காந்திஜி கூறினார். பம்பாயில் தம்மைக் கைது செய்த தேதி, கிழமை, திதி இவற்றைக் கூறி நாள் கணக்கிட்டு, ஏகாதசி



அமாவாசை முதலியவற்றைக் காட்டும் குறிப்பைத் தயாரிப்பதற்கும் வழிகாட்டினார். இதைத் தயாரிப்பதற்கு ஒரு நாள் முழுவதையும் செலவிட நேரிட்டது என்றாலும் பா மகிழ்ச்சியடைந்தார். அந்தக் குறிப்பில், எந்த நாட்களில் அமாவாசை, ஏகாதசி பௌர்ணமி முதலியவை வருகின்றன என்பதைக் காட்டுவதற்கு அடையாளம் இடப்பட்டது. பா, அதை உபயோகித்து ஏகாதசி, சோமவாரம் முதலிய நாட்களில் உபவாசம் இருந்தார்.

இதற்கிடையில் காந்திஜி ஒரு பஞ்சாங்கம் கேட்டுச் சர்க்காருக்குக் கடிதம் எழுதினார். சுமார் ஒரு மாதத்துக்குப் பிறகு பஞ்சாங்கம் கிடைத்தது.

●

## பாவின் விரதம்

ராஜ்கோட் சத்தியாக்கிரகத்தின் போது பா, மணிபஹன் படேல், மிருதுளா பஹன், சுசீலா பஹன் ஸாராபாய் ஆகியோரைக் கைது செய்து ராஜ்கோட் நகரத்திற்குப் பத்துப் பதினைந்து மைல்கள் தூரத்திலுள்ள ஒரு கிராமத்திலுள்ள சாவடியில் காவல் கைதிகளாக வைத்தார்கள். காந்திஜி உண்ணாவிரதம் ஏற்கத் தீர்மானித்த செய்தியைக் கேட்டதும் பா திடுக்கிட்டார். அவருடைய சோர்வு அதிகமாயிற்று.

காந்திஜியைச் சந்திக்கும் விருப்பம் பாவுக்கு இருப்பதைத் தெரிந்து கொண்ட அரசாங்கம், இரண்டு நாட்களுக்குப் பிறகு அவரை மட்டும் விடுதலை செய்



தது. ஆனால் மாலை வரையில் அவரைக் காந்திஜியிடம் அழைத்துச் செல்வதற்கு வண்டி அனுப்பவில்லை. பா வெளியே வந்து, காந்திஜி இருக்குமிடத்தைத் தெரிந்து கொண்டு, இரவில் அங்கு வந்து சேர்ந்தார். அவரைப் பார்த்ததும் காந்திஜி "விடுதலை செய்ய வேண்டும் என்று அரசாங்கம் விரும்பினால், உன்னுடன் கைதான மற்றவர்களையும் விடுதலை செய்து, ஒழுங்கான முறையில் அனுப்பியிருக்க வேண்டும். நீ வந்தது தவறு. ஆகவே முகாமுக்குத் திரும்பிப் போய் விடு" என்றார்.

அப்போது நள்ளிரவு. வழியைத் தெரிந்து கொண்டு துணிச்சலுடன் சென்றாலும், அனுமதிச் சீட்டு இல்லாமல் முகாமுக்குள் செல்ல முடியாது. பா தம்முடைய நிலைமையை விவரித்ததும் காந்திஜி "எப்படியாவது சென்று விடு. அதிகாரிகள் தகராறு செய்தால், அந்த இடத்திலேயே அமர்ந்து இரவு முழுதும் சத்தியாக்ரஹம் செய்" என்றார்.

திரும்பிச் செல்ல விருப்பமில்லை என்றாலும் காந்திஜியின் கட்டளையை ஏற்றுக்கொண்டு பா முகாமுக்குத் திரும்பினார். இது பற்றிச் சர்க்காருக்கு காந்திஜி கடிதம் எழுதினார். அரசாங்கமும் அதை ஏற்றுக்கொண்டு அனைவரையும், ஒழுங்கான முறையில் விடுதலை செய்தது. உடனே, காந்திஜியிடம் வந்த பா, தம்முடைய கஷ்டங்களை மறந்து, பாபுவுக்குப் பணிவிடை செய்வதில் முனைந்தார்.

●

## தன்மான உணர்ச்சி

தேசாயின் மறைவினால் காந்தியடிகள் அதிர்ச்சியடைந்தார் என்றாலும், தம்முடைய துக்கத்தை அடக்கிக்கொண்டு தம் அலுவல்களை ஒழுங்காகச் செய்து வந்தார். ஆனால் பா துயரம் தாளாமல் தவித்தார். வருத்தத்தைச் சிறிது மறந்திருப்பதற்காக அவருக்கு குஜராத்தி, புவியியல், வரலாறு முதலியவற்றில் அன்றாடம் பாடம் சொல்லித் தருவதில் காந்திஜி முனைந்தார். இந்தியாவின் முக்கிய நதிகள், மாகாணங்கள், தலைநகரங்கள் முதலியவற்றை காந்திஜி கூறும்போது பா சிரத்தையுடன் கேட்பார். ஆனால் முதுமை காரணமாக ஏற்பட்ட ஞாபக மறதியால் சில சமயங்களில் காந்திஜியின் கேள்விகளுக்குத் தவறாக விடையளிப்பார். இவற்றைக் குறித்துக்கொண்டு படிக்க விரும்பி காந்திஜியிடம் ஒரு நோட் புத்தகம் வாங்கித் தரும்படி பா கேட்டார். காந்திஜி ஐந்தாறு தாள்களைக் கொடுத்து, 'முதலில் இவற்றில் எழுதிப்படி. அபிவிருத்தி ஏற்பட்ட பிறகு நோட்புத்தகம் வாங்கித் தருகிறேன்' என்றார். பா வருத்தமடைந்தார். அவருடைய மனம் புண்பட்டு விட்டது என்பதை உணர்ந்த காந்திஜி ஆறுதலாகப் பேசி மீண்டும் பாடம் நடத்தலானார். சில நாட்களுக்குப் பிறகு கவியரசி சரோஜினி தேவி வெளியிலிருந்து ஒரு நோட்புத்தகம் வரவழைத்து பாவுக்குக் கொடுத்தார். ஆனால் பா அதை உபயோகிக்கவில்லை.

தொகுப்பு: கே.எஸ்.ஜம்புநாதன்



# கிரதலைன்னா ஆவக்காயா?

கைகளை லாகவமாகத் தூக்கி, உடம்பை ஒரு நெளிசல் நெளித்து, வாயை 'ஆ'வென்று பிளந்து, 'ஹா...வ்...வ்' என்ற ஆலாபனையோடு நீண்ட கொட்டாவி விடுவதில் ஏற்படும் திருப்தி குமாருக்கு வேறு எதிலும் கிடையாது.

அவன் வேலை அப்படி. 'விசாரணை இங்கே' என்று போர்டு போட்டு அவனை உட்கார வைத்திருந்தார்கள். எவன் வந்து விசாரிக்கிறான்? பாதிப்பேருக்கு விசாரணைக் குமாஸ்தா எங்கே சீறி விழுவாரோ என்ற பயம். மீதிப் பேருக்கு விசாரிப்பது கௌரவக் குறைச்சல் என்கிற எண்ணம்.

அன்று கைகளை லாகவமாகத் தூக்கி உடம்பையும் ஒரு நெளி நெளித்து வாயை 'ஆ...' என்று திறக்கப் போனவன், சட்டென்று நிறுத்தினான்.

காரணம், கச்சிதமான உயரத்தோடு குறுந்தைத்தனமான கண்களுடன் ஒரு மயில் நடந்து வந்து அவன் இடத்தில் தயங்கி நின்றதுதான்.

''ஓவல்டின்... ஓவல்டின்...'' என்று வாய் விட்டே கூவிவிட்ட குமார் உதட்டைக் கடித்துக் கொண்டான். 'உங்கள் ஓவல் முகத்தைப் பார்த்ததும் எனக்கு ஓவல்டின் நினைவு வருகிறது' என்று எப்படிச் சொல்லுவது?

அவள் விழித்தாள் திருதிருவென்று. ''ஓவல்டின்னா?''

''இல்லே. எனக்கு ஓவல்டின் என்றால் உயிர்'' என்றவன், மெதுவாகக் கண்களை 'ஷெட்யூலிங் டிபார்ட்மெண்ட்' பக்கமாக மேய விட்டான்.

ரத்னசாமியும், ராமனும் சேர்ந்து தன்னையே கவனிப்பதையும், அவர்களின் ஒரு கண்ணில் கேலியும், மறு கண்ணில் கிண்டலும் இருப்பதைப் புரிந்து கொண்டான். 'சனியன்கள்! அறுவைப் பிண்டங்கள்! ஒரு பெண் வந்து என்னுடன் பேசினால், இப்படியா பொறாமைப் பட வேண்டும்?' என்று நினைத்துக் கொண்டவன், மயிலின் பக்கமாகத் திரும்பி, ''என்ன வேண்டும்?'' என்று குழைவோடு கேட்டான்.

குயிலின் குரலில் மயில் கூவிற்று. ''மிஸ்டர் சாந்தமூர்த்தியைப் பார்க்கணும்.''

'' அப்படி யாரும் இந்த ஆபீஸில் இல்லையே!''

''என்னது?'' பையிலிருந்த கவரை எடுத்து நீட்டினாள். ''இவர்...''

''ஓ! இவரா? இவரை நாங்கள் ருத்ர மூர்த்தி என்றுதான் கூப்பிடுவோம்'' என்றவன் அவள் கண்களில் பீதி நிரம்புவதைக் கண்டதும், ''பயப்படாதீர்கள். இங்கே இருப்பவர்களுக்கெல்லாம் ஒரிஜினல் பெயர் இருப்பதில்லை. எல்லோருக்கும் ஏதாவது புனைப்பெயர் உண்டு!'' என்றான்.

அவளை அழைத்துச் சென்று, ''இதுதான் சாந்தமூர்த்தியின் அறை'' என்று காட்டியவன் கேட்டான்: ''உங்கள் பெயர்?''

''குயிலி!''

''நீங்கள் ஒன்றும் கறுப்பு இல்லையே! சிவப்பாகத்தானே யிருக்கிறீர்கள்? அப்புறம் ஏன் 'குயிலி' என்று பெயர் வைத்துக் கொண்டீர்கள்?''

''நானா வைத்துக் கொண்டேன்? என் அப்பா அம்மா அல்லவா வைத்திருக்கிறார்கள்?''



ராஜேந்திரகுமார்

இந்தப் பதிலில் ஏதோ ஹாஸ்யத்தைக் கண்டு அவள் சிரிக்க, அவள் சிரிப்பில் எதையோ கண்டு அவன் சிரித்தான்.

'பேஷ்! இதைவிட நாசூக்காக, புத்திசாலித்தனமாக, நான் ஒரு பிரம்மச்சாரி என்பதை அவளுக்கு விளக்கி யிருக்க முடியாது'' என்று எண்ணியவாறு திரும்பி நடந்தான்.

அரை மணி நேரம் கழித்து அதே குயில் கூவிற்று: ''வரேன்!''

நிமிர்ந்து பார்த்துப் பல்லை இளித்தான். அவள் நடந்து போவதையும், காற்றில் பறக்கும் நைலக்ஸ் முந்தானை அவனை 'வா வா' என்று அழைப்பதையும் பார்த்துக் கொண்டே யிருந்தான். அவள் லிப்டில் ஏறியதும்தான் 'சட் என்ன மடத்தனம்?' என்று தலையி லடித்துக்கொண்டான், ரொம்ப தலை கலையாதவாறு. 'வரேன் என்றாளே, எப்போது என்று கேட்கத் தோன்றியதா எனக்கு?'

'சட்'. அலுத்துக் கொண்டான் குமார். 'டெலிபோனுக்கும் நானே, வரவேற்புக்கும் நானே. என்ன வேலை இது? கொட்டாவி விடக்கூட நேரம் தராமல்?'' என்று அலுப்புடன் போனை எடுத்து 'ஹலோ' என்று பல்லைக் கடித்தவன், 'குயில்' என்று உளறிக் கொட்டிக் கிளறி முடிஞன். 'குயில் மாதிரிக் குரல்' என்று எப்படி விளக்க முடியும்?



"ஹலோ" நான்காவது முறையாக அழைப்பு வந்தது டெலிபோனில். "நான் குயிலி பேசுகிறேன் என்கிறது உங்களுக்கு எப்படித் தெரிந்தது? யார் ஸார் நீங்க?" என்ற பதில் கிடைத்ததும் புரிந்துப் போனான்.

"ஹஹ்ஹா. நான்தான் குமார். அன்றைக்குச் சாந்தமூர்த்தி அறைக்கு அழைத்துப் போனேனே?"

"ஓ! நீங்களா?"

"நானே கேட்க நினைச்சேன். அன்றைக்குப் போறப்ப 'வரேன்' என்று கூறி விட்டுப் போனீர்களே, 'எப்ப' என்று சொல்லவில்லையே?"

"இன்னும் பத்தே நிமிஷங்களில் வரேன்; உங்கள் ஆபீஸில் எனக்கு டெலிபோன் ஆபரேட்டர் வேலை கிடைத்திருக்கிறது. வேலையை ஒப்புக்கொள்ள இதோ வரேன்."

"சீக்கிரம்... சீக்கிரம்" என்று உளறி விட்டுப் பியூனைக் கூப்பிட்டு, அவன் முணுமுணுப்பையும் பொருட்படுத்தாமல், டெலிபோன் மேஜையைச் சுத்தமாகத் துடைத்து விடச் சொன்னான். "நாற்காலியை நகர்த்து. மேஜையைத் தட்டு. குப்பைக் கூடை கவிழ்ந்து கிடக்கிறது பார். நிமிர்த்து" என்று வேகமாகக் கட்டளையிட்டவன், ஏதோ சந்தேகம் உறுத்தவே, திரும்பி, 'ஷெட்யூலிங்'கைப் பார்த்தான்.

அதே ரத்தினசாமி, அதே ராமன், அதே கண்கள், அதே கேலி! அதே கிண்டல்! 'சீச்சீ' என்று அருவருத்துக் கொண்டாலும் நிமிருடன் காலரை நிமிர்த்திக் கொள்ளத் தவறவில்லை.

ஒரு நாள் ஏதோ காதல் விவகாரப் பேச்சு வந்தபோது, இதே ராமன் சொன்னான்: "டேய் குமார்! உன்னைப் போல் ஒரு கஞ்சமா பாதகனை எந்தப் பெண்ணும் விரும்ப மாட்டாள். காதலிக்கவும் மாட்டாள்."

ரீஃப் பேப்பரிலிருந்து ஒரு பேப்பரைக்கூட மற்றவர்கள் கேட்டுத் தரமாட்டான் குமார். அந்த அளவு சிக்கன புத்தி அவனுக்கு. அதற்கு இப்படியா சொல்லிக் காட்டுவது? பொருமிய குமார், "இருடா, பொடியா! பேசிக் கறேன்!" என்று கருவிக் கொண்டான்.

கொஞ்ச நாட்கள் கழித்து...

"நான்சென்ஸ்... இடியட்..." என்று சீறும் சாந்தமூர்த்தியைப் பார்த்து விழித்தான் குமார். "என்ன ஸார்?" என்று குழறினான்.

"ஏகப்பட்ட ரிப்போர்ட் வருகிறது. நீயும் அந்தப் பெண்ணும் சதா பேசிக் கொண்டிருக்கிறீர்களாமே?"

"ஆமாம், ஸார்!"

"என்னது? ஏண்டா பேசறதுக்கா ஆபீஸுக்கு வர்றீங்க?" என்று சீறினார்.

"அப்கோர்ஸ்! அதுதானே எங்க வேலை?"

குமாருக்கு அப்படிக் கூற எப்படித்தான் துணிச்சல் வந்ததோ? அதிர்ந்து போன சாந்தமூர்த்தி, "பெருமாளே!" என்று தலையில் கை வைத்துக் கொண்டார் "என்னப்பா சொல்றாய்?"

"ஸார், நானோ வரவேற்பாளன். அவளோ டெலிபோன் ஆபரேட்டர். நாங்கள் இரண்டு பேரும் பேசாமலிருந்துட்டா வேலை எப்படி நடக்கும்? எங்கள் வேலையே பேசுவதுதானே?" என்று கூறி அவரை அயர வைத்துவிட்டு வெளியே வந்தவன், 'ஷெட்யூலிங் டிபார்ட்மெண்ட்'டை முறைத்தவாறு வந்து தனது இடத்தில் அமர்ந்து கொண்டான்.

இரண்டு நாட்கள் லீவெடுத்துத் திரும்பி வருவதற்குள் அப்படி என்ன நடந்துவிட்டது ஆபீஸிலே? காலையிலிருந்தே கவனித்துவருகிறான் குமார். அந்தப் பெண் அவனிடம் எதையோ சொல்லத் துடிக்கிறாள். என்ன என்பதுதான் புரியவில்லை.

இவனும் அவளிடம் எதையோ சொல்ல வேண்டுமென்று தவித்துக் கொண்டிருந்தான். ஆனால்... என்னவென்றுதான் புரியவில்லை. ஒருகால் இதுதான் காதலோ?

மத்தியானம் ஒன்றடிக்கப் பத்து நிமிஷம் இருந்தது.

அவள் சிரித்தவாறு எழுந்து நடந்து வர, அவள் நடையைப் பார்த்து 'அன்னம்....அன்னம்" என்றவன் விழித்தான். பிறகு "ஹி... ஹி.... மணி ஒன்றாகப் போகிறதா.... பசி... அன்னம் அதாவது சாப்பாட்டு ஞாபகம் வருகிறது" என்று சமாளித்தான்.

"நானும் அதைச் சொல்லத்தான் வந்தேன். சாப்பாட்டு நேரத்தில் நேரே சாப்பிடப் போய்விடாதீர்கள். அதற்கு முன்னால் நான் உங்களை ஒன்று கேட்கணும்" என்றாள்.

அந்த ஒன்றைக் கேட்க அவ்வளவு அவசரமா? சாப்பாட்டைக்கூட அல்லவா ஒத்திப் போடச் சொல்கிறாள்? இப்படி எண்ணிய குமாரின் உடம்பு இலேசாகிக் காற்றிலே பறப்பதைப் போலிருந்தது.

ஒன்றடித்து விட்டது. சிலர் காரியரை எடுத்துக் கொண்டு கிளம்பினார்கள். பலர் டிபன்பாக்ஸ் மூடியைத் திறக்கப் போனார்கள். இன்னும் சிலர் ஹோட்டலுக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

குமாரை நோக்கி உதட்டைச் சுழித்துச் சிரித்தவாறு நடந்த குயிலி விடுவிடென்று 'கான்பரன்ஸ் ஹால்' கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனாள். கிளுகிளுப்புடன் எழுந்து நடந்தான்குமார். ஷெட்யூலிங் டிபார்ட்மெண்டைக் கடந்தபோது சட்டென்று அவன் காலரை யாரோ பிடித்திழுத்து நிறுத்தினார்கள். திரும்பிப் பார்த்தால் ராமனும், ரத்னசாமியும்தான்.

"போகாதேடா பாவி" என்று அவர்கள் அலற, "சட், அபசகுனம்" என்று அவர்கள் கையைத் தட்டிவிட்டான் குமார்.

"டேய்! தனியாக அவளோட அறைக்குப் போறியே, யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்?"

"முக்கியமான விஷயமா, பேசப் போகிறேன்."

"டேய் பாவி!" ராமன் அலறினான்...

"உள்ளே போனால் அவள் என்ன கேட்பாளோ?"

"வில்லன்களா! பொறாமைப் பிண்டங்களா!" என்று சபித்தவாறு நேரே உள்ளே போனான் குமார். "வந்து... வந்து என்னமோ பேசணும் என்றீயே!"

''பேசணுமா? கேட்கணுமென்றுதானே சொன்னேன்.''

''அதுதான் என்ன?''

''வந்து தப்பா நினைக்க மாட்டீர்களே?''

''நோ... நோ...''

''இல்லை, நீங்க கோபிப்பீங்க.''

''நெவர், நெவர்'' என்றவன் ஆவலுடன் கேட்டான். ''என்ன அது?''

''வந்து... மாட்டேன். எனக்குக் கூச்சமாயிருக்கு.''

''தயங்காமல் கேளு.''

''கேட்கட்டுமா?'' என்றாள் அவள் ஒரு முடிவுடன். ''எனக்கு ஓர் ஆசை. அம்மாவுக்கோ அப்பாவுக்கோ தெரிஞ்சால் நான் தொலைஞ்சேன்'' என்று பீடிகையுடன் ஆரம்பித்தவள், கேட்டு முடித்தபோது...

குமாரின் முகம் ஆயிரம் கோணலாயிற்று.

ஈயாடாத முகத்துடன் சாப்பிட்டுக்கொண்டிருந்த ரத்தினசாமிக்கும், ராமனுக்கும் நடுவிலே வந்து நின்ற குமார், டொக்கென்று டிபன் காரியரை மேஜையின் மீது வைத்துப் பரபரவென்று பிரிக்க ஆரம்பித்தான்.

''என்னடா? பெரிய கான்பரன்ஸ் என்றாய்? இரண்டே நிமிஷத்திலே ஓடிவந்துவிட்டாய்?''

நறநறவென்று பல்லைக் கடித்த குமார் குனிந்து டிபன் காரியரிலிருந்து ஒரு சின்ன ஸ்டீல் தட்டை எடுத்துப் பார்த்தான். எண்ணெய்க் கிண்ணத்தில் செக்கச் செவேலென்று மிதந்த ஆவக்காய் ஊறுகாயைப் பார்த்ததும், அவன் உதடு பிதுங்கியது. கோபத்துடன் பியூனை அழைத்து அவனிடம் தட்டை நீட்டினான், ''இந்தா! இதைக் கொண்டு போய், அந்தப் பெண்ணிடம் தந்துவிட்டு வா'' என்ற குறிப்புடன்.

''ஆவக்காயா? டேய்! கொடுக்காதேடா பாவி!'' என்று ராமனும் ரத்தினசாமியும் பதறினார்கள்.

''ஏனாம்?'' என்று எரிந்து விழுந்தான் குமார். ''அது என் ஊறுகாய். என் இஷ்டம். தருவேன். உனக்கென்னவாம்?''

அவன் ஏற்கனவே பெரிய எரிச்சலிலிருந்தான். எதையோ பிரமாதமாய் எதிர்பார்த்து நெஞ்சம் கிளுகிளுக்க நின்றிருந்தவனிடம், பெரிய முஸ்தீபுகளுடன் ஆரம்பித்துக் கடைசியில் ''உங்களுக்குத்தான் தினமும் ஆவக்காய் வருகிறதே! எனக்கு ஆவக்காய் என்றால் உயிர். வீட்டிலே அம்மாவும் அப்பாவும் தொட்டுக்கூடப் பார்க்க விட மாட்டார்கள். இன்றைக்கு மட்டும் உங்களுக்கு வருகிற ஆவக்காயை எனக்குத் தர முடியுமா?'' என்று ஒரு பெண் கேட்டால் எப்படி இருக்கும்?

நாவால் நொட்டை யடிக்கும் சத்தம் கேட்டு நிமிர்ந்து பார்த்தான். குயிலி ஊறுகாயைச் சுவைத்தவாறு ராமனையும், ரத்தினசாமியையும் முறைத்து 'உம்' என்றாள்.

ஆச்சரியம்! அதிசயம்! ஆனால் உண்மை!

எழுந்துநின்ற ராமனும், ரத்தினசாமியும் எச்சில் என்றும் பாராமல், குமாரின் கைகளைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினார்கள். ''குமார்! எங்களை மன்னித்துவிடப்பா. நீ கஞ்சமா பாதகன் இல்லை. ஒப்புக் கொண்டோம்.''

''நான் கனவு காண்கிறேனா! யாராவது கிள்ளுங்களேன்'' என்றவன், குயிலியே வெடுக்கென்று கிள்ளியதும் துள்ளினான்: ''உண்மைதான். ஆனால் இது எப்படி நடந்தது? இதுகளாவது மன்னிப்புக் கேட்பதாவது!''

குயிலி விளக்கினாள். அவன் லீவிலிருந்தபோது இரண்டு பேருமாக வந்து அவனைப் பற்றி ஏதோ தாறுமாறாகச் சொல்லிப் பார்த்திருக்கிறார்கள். அவள் நம்ப மறுக்கவே, சவால் விட்டிருக்கிறார்கள். அவனிடமிருந்து அதாவது அந்தக் கஞ்சமா பாதகனிடமிருந்து, ஏதாவது ஓர் அல்பப் பொருளையாவது குயிலி வாங்கிவிட வேண்டும். அப்படி வாங்காவிட்டால் குயிலி மன்னிப்புக் கேட்க வேண்டும். அதோடன்றி இனிமேல் அவனோடு பேசக் கூடாது. வாங்கிவிட்டால் இவர்கள் குமாரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். அவன் வழிக்கே போகக் கூடாது.

வெற்றி குயிலிக்கே! ஆவக்காய் வாங்கி விட்டாளே!

''அவ்வளவுதானா! அதனால்தான் ஆவக்காய் கேட்டாயா?'' குமார் கேட்டான், பச்சையாக. ''நான் என்னவோ உள்ளத்தைத் தான் கேட்கப் போகிறாய் என்று நினைத்தேன்.''

''அதெப்படி நான் கேட்பது?'' அவள் கேட்டாள் அதைவிடப் பச்சையாக. ''அது ஆண்களால் கேட்கப்பட வேண்டும்!''

அவள் கன்னம் சிவப்பதைக் கண்டதும், ''ஆப்பிள் ஆப்பிள்...'' என்றவன் விழிக்கவில்லை. ''உன் கன்னம் சிவக்கும்போது ஆப்பிள் மாதிரி இருக்கிறது'' என்றான் தைரியமாக.

## பேசாத வார்த்தைகள்!



இந்த மூவரும் ஏதோ கூற வந்து கூறாமல் இருக்கிறார்கள். இவர்கள் சொல்ல வந்தது என்ன? 87-ம் பக்கம் பார்க்கவும்.

**[கவலைக்கு இடமளிக்கும் அளவுக்கு இல்லாவிட்டாலும் சென்னை நகரில் ஜாண்டிஸ் எனப்படும் மஞ்சள் காமாலை நோய் பரவலாக இருந்து வருகிறது. இந்நோய் பற்றி மக்கள் அவசியம் அறியவேண்டிய சில தகவல்களை இங்கு மருத்துவ நிபுணர் தருகிறார்.]**

1. மஞ்சள் காமாலை எப்படிப் பரவுகிறது ?

இந்நோய் பரவக் காரணம் தண்ணீர் தான். அசுத்தமான இடங்களில் விற்கப்படும் ஈ மொய்த்த பழங்களை வாங்கிப் புசிப்பதும் ஒரு காரணம்.

அசுத்தமான நீரில் கழுவப்பட்ட காய்கறி பழ வகைகளைத் தோலுடன் பச்சையாகப் புசிப்பதைத் தவிர்க்க வேண்டும். வீட்டில் யாருக்காவது காமாலை நோய் வந்தால் அவர்கள் சாப்பிட்ட தட்டு, டம்ளர் இவற்றைக் கொதிநீரில் கழுவ வேண்டும். முக்கியமாக மலஜலம் கழிக்கும் இடங்களில் பினைல் தெளித்துச் சுத்தமாக வைக்க வேண்டும்.

2. சென்னை நகரில்தான் குழாய்த் தண்ணீர் சுத்தம் செய்யப் படுகிறதே ? குடிநீர் எப்படி இந்நோய்க்குக் காரணமாகும் ?

காலையில் சிலமணி நேரமும் மாலையில் சில மணி நேரமும் குழாயில் தண்ணீர் விடுகிறார்கள். இப்படி விட்டு விட்டுக் குடிநீர் வழங்கப்படுவதே ஒரு காரணமாகும். குழாயில் நீர் வராதபோது, அதில் வெற்றிடம் (Vacuum) தானே உள்ளது. அருகிலேயே சாக்கடைக் குழாய் இருப்பதால், அந்த அசுத்த நீரைக் குடிநீர்க் குழாயிலுள்ள வெற்றிடம் தன்பால் இழுக்கிறது. டில்லியில் முன்பு பெருமளவில் மஞ்சள் காமாலை பரவியதே, நினைவிருக்கிறதா ? சாக்கடைத் தண்ணீரால் வந்த வினைதான் !

3. 'அப்படியானால் குழாய்த் தண்ணீரை உபயோகிப்பது ஆபத்தானதா ?

கொதிக்க வைத்துத்தான் உபயோகிக்க வேண்டும். கொதிக்க வைத்தால் நோய்க் கிருமிகள் இறந்துவிடும். ஆனால் பெண்கள் 100 டிகிரி(c)க்கு நீரைக் கொதிக்க வைப்பதில்லை. சூடு வந்ததும் இறக்கி விடுவது தவறு.

4. இந்நோயின் தன்மை என்ன ?

காலரா, டைபாய்டு போல இதுவும் கிருமிகளால் பரவும் நோய். பாக்டீரியாவை விடச் சிறிதான வைரஸ் கிருமிகளால் பரவுகிறது. தொடக்கத்தில் காய்ச்சல் இருக்கும். மூன்று நான்கு நாட்களுக்குப் பிறகு ஜுரம் குறைந்து விடும். பதினைந்து நாட்களில் நோய் தானாகவே மறைந்துவிடும். இந்நோய் கண்டவர்களின் கல்லீரல் ஓரளவு பாதிக்கப் படுகிறது. கல்லீரல் சரியாக இயங்கா விட்டால் பசி இருக்காது.

5. பதினைந்து நாட்களில் நோய் தானாகவே மறைந்து விடும் என்கிறீர்களே ? அப்படியானால் மருந்து சாப்பிட அவசியமே இல்லையா, டாக்டர் ?

அவசியமில்லை என்றே கூறுவேன். பதினைந்து நாட்கள் பூரண ஓய்வு எடுத்துக் கொண்டால் போதும். நோய் தானாகவே மறையும். கீழாநெல்லி, மஞ்சள் கரிசலாங்கண்ணி இவை இந்நோய் கண்டவர்களுக்கு ஓரளவு குணமளிக்கிறது. LIV-52 முதலிய பேடண்ட் மருந்துகள்கூடக் கீழாநெல்லியில் தயாரிக்கப்படுவதுதான். கல்லீரல் சரியாக இயங்க இது உதவும். புரதச் சத்து மிகுந்த உணவு நலம் பயக்கும்;

6. மஞ்சள் காமாலையினால் யாருமே உயிர் இழப்பதில்லையா ?

100க்கு 95 பேர் பூரண குணமடைந்து விடுகிறார்கள். எஞ்சிய ஐந்து சதவிகிதம் பேர்களில், காமாலை மறைந்த பிறகும் சிலருக்குக் கல்லீரல் சரிவர இயங்குவதில்லை. கல்லீரல் நன்றாக வேலை செய்யப் பல மாதங்கள் ஆகலாம். இந்த ஐந்து சதவிகிதம் பேர்களுள் சிலர் மட்டுமே மிகக் கடுமையாகப் பாதிக்கப் படுகின்றனர். சில 'கேஸ்'களில் என்ன மருந்து கொடுத்தாலும் கல்லீரல் சீர்ப்படுவதில்லை. கல்லீரல் விரிவடைந்து சிலருக்கு மகோதரம் என்ற வியாதி தோன்றுவதும் உண்டு. இம்மாதிரி நேரிடுவது மிகக் குறைந்த சத விகிதந்தான்.



## மருந்து வேண்டாம்; ஓய்வு போதும்!



7. காமாலை நோயின் அறிகுறிகள் என்ன ?

ஆரம்பத்தில் சில நாட்கள் காய்ச்சல் இருக்கும். கண்கள் மஞ்சளாக மாறும். சிறுநீரும் கூடத்தான். பசி இராது. வாந்தி எடுக்கும்.

8. இதற்குத் தடுப்பு ஊசி கண்டுபிடித்திருக்கிறார்களா ?

இதுவரையில் கண்டுபிடிக்கப் படவில்லை. ஆனால், இந்நோய்க் கிருமி (Virus) களை இனம் பிரித்து அறிந்திருக்கிறார்கள். இன்ப்ளுயன்ஸாவுக்கும்கூட தடுப்பு ஊசி (Vaccine) தயாரிக்கப் பட்டுள்ளது மேலை நாடுகளில். ஆனால் மஞ்சள் காமாலைக்குத் தடுப்பு ஊசி இன்னும் கண்டு பிடிக்கப் படவில்லை.

[டாக்டர் ஏ. எஸ். ராமச்சந்திரன் அவர்களைப் பேட்டிகண்டு எழுதியவர்:—'பாணன்']

# சிங்கநாதம் அடங்கியது!

புத்தனேரி ரா. சுப்பிரமணியம்

மக்களின் நன்மை எனும்இசையை
வழங்கிய வீணை உடைந்ததுவோ!
திக்கினில் எங்கும் தமிழ்காக்கும்
சிங்க நாதம் அடங்கியதோ!

உலகம் கண்ணீர் வடிக்கிறதே!
உள்ளம் நடுங்கித் துடிக்கிறதே!
கலையின் ஓலம் ஒலிக்கிறதே!
கன்னித் தமிழும் தவிக்கிறதே!

தமிழ்நா டென்னும் பெயர்சூட்டித்
தந்த முதல்வனின் மூச்செங்கே?
அமிழ்த மழைபோல் தமிழ்பொழியும்
அண்ணா நாவின் பேச்செங்கே?

முத்தமிழ் தீட்டும் மறுமலர்ச்சி
மூட்டும் விரல்களின் அசைவெங்கே?
எத்தனை ஆயிரம் மேடையிலே
ஏறிய கால்களின் வலிவெங்கே?

சிக்கல் எதனையும் தீர்க்கின்ற
சிந்தனைச் சிற்பியின் சிரிப்பெங்கே?
மக்கள் வாழ்த்தும் படியரிசி
வழங்கிய கரத்தின் துடிப்பெங்கே?

நோக்கம் எதிலும் நூற்றுக்கு
நூறு வெல்லும் தமிழ்அண்ணா
வாழ்க்கைத் துறையில் அறுபதிலே
மறைந்த துயரோ மாளாதே!

மாற்றார் மனமும் வருந்தாத
வகையில் வழங்கும் பெருந்தன்மை
ஏற்ற தலைவனை இழந்தோமே!
இடத்தை நிறைப்பார் இனிஎவரே?

சிங்கத் தலைவன் அண்ணாவின்
சிறந்த தலைமை இழந்தோமே!
அங்கம் முழுதும் வாயாக
அழுதும் துயரம் ஓயாதே!

அண்ணா என்னும் பேரொளியே!
அன்பால் ஆட்சி புரிந்தவனே!
எந்நாள் இனிமேல் உனைக்காண்போம்!
இதயம் ஆறுதல் எந்நாளோ?

ராமேந்திர நாராயணன் இளைஞன், அழகன், செல்வச் சிறப்பு மிக்கவன். அவன் மனைவி பத்தொன்பது வயதே நிரம்பிய யுவதி, சௌந்தர்யவதி. நாராயணனின் ஜமீனிலிருந்து ஆண்டொன்றுக்கு வருமானம் ஐந்து லட்சம் ரூபாய்!

இவ்வளவிருந்தும் என்ன பயன்? ராமேந்திரனிடம் ஒழுக்கம் இல்லை. அவன் மனைவி விபாவரி சதா துயரத்தில் ஆழ்ந்திருந்தாள். ராமேந்திரனே செல்வச் செருக்கில் நடத்தை கெட்டுத் திரிந்தான். தன் கருத்தைச் செலுத்தி அன்பைச் சொரிந்து மகிழ ஒரு குழந்தை இருந்தாலாவது விபாவரி கைம்பெண் ஆன அவள் அழுது புலம்பினாள்.

''அழுது என்ன பயன்? மாண்டவன் மீளவா போகிறான்? மனத்தைத் தேற்றிக் கொள்'' என்று உற்றார் உறவினர் ஆறுதல் கூறினார்கள்.

ஆனால் அவர்கள் எதிர்பாராத அந்த அதிசயமும் நிகழ்ந்தது! மாண்டவன் மீளவே செய்தான், இருபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு! தன் ஜமீனான போவாலின் தலைநகர் ஜெய்தேவ்பூருக்கு வந்து சேர்ந்தான். அதுவும் எப்படி? சன்யாசிக் கோலத்தில்! இப்படி வந்தவன் மனைவியிடம் அன்பாகப் பேச முற்பட்டான்; சொத்துக்களின் மீது உரிமை கொண்டாடவும் தொடங்கினான்!

அவனது உறவினரோ இதற்குள் செல்வத்தின் சுகத்தை ருசி கண்டிருந்தனர். அவனது சொத்தையெல்லாம் பங்கு பிரித்துக்



# மாண்டவன் மீண்டால்?




தன் கணவனைப் பற்றிய குறைகளை மறந்திருப்பாள். ஆனால் விபாவரி இவ்விஷயத்திலும் துரதிர்ஷ்டசாலியாகவே இருந்தாள்.

ஒரு சமயம் கணவனும் மனைவியும் கோடையைக் கழிக்க டார்ஜிலிங் சென்றிருந்தார்கள். அங்கிருந்தபோது திடுமென்று ஒருநாள் ராமேந்திரன் நோய்வாய்ப்பட்டான். ஜுரம் முற்றி இறந்தே போனான். இடுகாட்டுக்கு உடலைக் கொண்டு சென்றார்கள்.

இது நடந்தது 1909ல். அவன் மனைவிக்கு அவனிடம் எவ்வளவோ குறை உண்டு என்றாலும்



கொண்டிருந்த அவர்கள் இப்போது திடுமென்று எல்லாவற்றையும் மீண்டும் இழப்பதென்றால் அதற்கு இடம் தருவார்களா? மனம் வருமா?

''யார் நீ? நீ ராமேந்திரன் என்பதற்கு என்ன அத்தாட்சி? எங்களால் நம்ப முடியாது!'' என்றார்கள். இப்படி எல்லாருமாகச் சேர்ந்து ஒரேயடியாகச் சாதிக்கவே தனக்கு ஒரு பைசா



"ரூம் வாடகைக்கும் சாப்பிட்ட பில்லுக்கு மாகச் சேர்த்து செக் கொடுத்தீர்கள். ஆனால் அதுலே கையெழுத்து போடலியே, நீங்க?''

"கட்டில் இல்லாத ரூமில் படுத்துத் தூங்கித் தண்ணீர் இல்லாத பாத்ரூமில் குளித்தேன். பாதாம் இல்லாத பாதாம் அல்வா, உப்பு இல் லாத போண்டா, சர்க்கரை இல்லாத காப்பி என்று சாப்பிட்டேன். அதனாலேதான் கையெழுத்து இல்லாத செக் தந்தேன்.''

---

பெயராது என்று ராமேந்திரன் கண்டு கொண்டான். வழக்காட வேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்பட்டது.

நீதிபதிகள் முன்பு சன்யாசி கூறிய கதை விசித்திரமாக இருந்தது. அவன் சொன்னான்:

''நான் நோய்வாய்ப்பட்டிருந்தது உண்மை; ஆனால் சாகவில்லை. நான் கண் விழித்துப் பார்த்த போது இடு காட்டில் இருப்பதைக் கண்டு திடுக் குற்றேன். இடையில் என்ன நடந்தது என்று தெரியவில்லை. நோயின் கடுமை காரணமாக என்னால் அசைய முடிய வில்லை. என் அதிர்ஷ்டம் அந்தப் பக்க மாக வந்த சில சாதுக்கள் என் முனகல் ஒலி கேட்டு அருகில் நெருங் கினார்கள். என்னைச் சிதையிலிருந்து இறக்கித் தூக்கிச் சென்றார்கள்.

''கடுமையான விஷ ஜுரம் காரண மாகவோ அல்லது இடுகாட்டில் நான் இருப்பதை உணர்ந்ததும் ஏற்பட்ட அதிர்ச்சி காரணமாகவோ நான் பழைய நினைவுகளை இழந்துவிட்டேன். சன்யாசிகள் கூட்டத்தில் ஒருவனாகப் பல ஆண்டுகள் வாழ்ந்து வந்தேன். ஒரு நாள் நான் வழுக்கி விழுந்த போது மண்டையில் பலமான அடி பட்டு விட்டது. அப்போது எனக்குச் சட்டென்று பழைய ஞாபகங்கள் வந்தன. நாட்கள் செல்லச் செல்ல என்னை இந்நினைவுகள் குடைந்தெடுத் தன. மன அமைதி பெற வேண்டி சந்நியாசிகளிடம் விடைபெற்று ஜமீ னுக்கு வந்தேன். கொஞ்சம் கொஞ்ச மாக ஊராரிடம் விசாரித்ததில் நோய் வாய்ப்பட்டிருந்த ராமேந்திரன் இறந்து விட்டதாக அவர்கள் கருதுவதை உணர்ந்தேன். மேலும் ஆராய்ந்ததில் ஒரு பெரிய சதி அம்பலமாயிற்று.

''ஜுரத்தின் கடுமை காரணமாகப் பிரக்ஞையற்ற நிலையில் கிடந்த என்னை இறந்து விட்டதாக நினைந்து இடுகாட்டுக்கு எடுத்துப் போய்த் தகனம் செய்யவும் முற்பட்டிருக் கிறார்கள். தீ கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்த போது அதுவரை குமுறிக் கொண்டிருந்த மேகங்கள் பெருமழை யாகப் பெய்து தீர்த்தன. சில்லென்ற மழை நீர் பட்டதும் நான் சுயநினைவு பெற்று விழித்தெழுந்திருக்கிறேன். சந்நியாசிகளுடன் நான் சென்றுவிட்ட பிறகு மழை நின்றதும் நிதானமாக என்னைச் சிதையிலிட்டவர்கள் அந்தப் பக்கம் திரும்பவும் வந்திருக்கிறார்கள். என்னைக் காணாது திகைத்திருக்கிறார்கள். உயிருடன் இருந்த ஒருவனைச் சிதை யில் இட்டோம் என்பதா? ராமேந் திரனின் உடலைக் காணோம் என்பதா?

''இரண்டு விதமாகவும் கூறாமல் ராமேந்திரனின் உடல் தகனமாகி விட்டது என்றே சொல்லிவிட்டார்கள். அத்துடன் என் சொத்தை அனைவரும் பங்கு போட்டுக் கொண்டுமிருக்கி றார்கள். அதனாலேயே இப்போது என்னை இன்னார் என்று தெரியாது என்பதாக நடிக்கிறார்கள்.''

ராமேந்திர நாராயணன் இவ்விதம் தன் கட்சியை எடுத்துச் சொன்னான். சன்யாசிகளின் அனுமதியுடன் தான் துறவறத்திலிருந்து விடுதலை பெற்று மீண்டும் தன் ஜமீனை ஆளவிரும்புவ தாகத் தெரியப்படுத்தினான். அவன் அதிர்ஷ்டம் அவன் தங்கைகளும் பாட்டியும் சில பழைய வேலைக்காரர் களும் அவனை அடையாளம் கண்டு கொண்டு நீதிமன்றத்தில் சாட்சியம் சொன்னார்கள்.

நீதிபதிகளின் தீர்ப்பின்படி சட்ட பூர்வமாக ராமேந்திரன் தன் ஜமீனைத் திரும்பப் பெற்றான். வருமானம் முன் போலவே ஆண்டொன்றுக்கு ஐந்து லட்சத்துக்குக் குறைவில்லை. மாண்டு மீண்ட அனுபவம் தந்த அறிவாலோ அல்லது துறவிகளின் சகவாசத்தால் ஏற்பட்ட மனமாற்றத்தாலோ அவன் பழைய தீயகுணங்களை விட்டொழித்து நன்னடத்தையையும் பெற்றிருந்தான்.

இவ்வளவிருந்தும் பயன் என்ன? அவன் தன் மனைவியின் அன்பை மட்டும் திரும்பப் பெறவே முடியவில்லை!

**உண்மைச் சம்பவத்தை எழுதியவர்:**

**வி. எஸ். ஸாக்டண்கர்**

# ஃபயர்க்ரீட் மற்றும் ஃபயர்க்ரீட் சூப்பர்

## ஏஸிஸியின், நிரூபணமான நம்பகத்திற்குரிய, வார்ப்படத்திற்கேற்ற, வெப்பம்தாங்கவல்ல சிமெண்டுகள்

எஸிஸி யின், நிரூபணமான நம்பகத்திற்குரிய, வார்ப்படத்திற்கேற்ற, வெப்பம்தாங்கவல்ல சிமெண்டுகள்

இந்த இரண்டு ரிஃப்ராக்டரி சிமெண்டுகளையும் பின்வரும் தயாரிப்புகளுக்கோ அவற்றைச் செப்பனிடவோ உபயோகிக்கலாம்

● ரோட்டரி சூளை லைனிங்குகள் ● ஃபர்னேஸ் ஆர்ச்சுகள் ● உலைச் சுவர்கள் ● உலைக் கலங்கள் ● கார்டரப்புகள் ● மேல்விட்டங்கள் மற்றும் ● வார்க்கப்பட்ட அமைப்புகள் ● கன்னிங் முதலியவை.

ஃபயர்க்ரீட் மற்றும் ஃபயர்க்ரீட் சூப்பர் விரைவில் இறுகி, உறுதியுள்ளவையாகிவிடுகின்றன. எனவே அவற்றினுல் ஆன அமைப்புகள் அதிக கனத்தைத் தாங்கக் கூடியவையாகவும், மிதமிஞ்சிய வெப்ப அதிர்ச்சிகளைத் தாங்கக்கூடியவையாகவும் அமைகின்றன.

### ஃபயர்க்ரீட் மற்றும் ஃபயர்க்ரீட் சூப்பரினுலான சில பொருள்கள்



ஃபயர்க்ரீட்டினுலான சில ரிஃப்ராக்டரி அமைப்புகள்



ஃபயர்க்ரீட்டில் வார்க்கப்பட்ட கார்டரப்புகள்.

ஃபயர்க்ரீட் லைனிங் கொண்ட ரிஃப்ரேக்டரி உலைக்கலம்



ரோட்டரி சூளையின் வெப்பம் குறைவான பாகத்திற்கு ஃபயர்க்ரீட் லைனிங் கொடுத்தல்






1350° சென்டிக்ரேட் வரை வெப்பத்திற்கு

ஃபயர்க்ரீட் மற்றும் ஃபயர்க்ரீட் சூப்பர் சுலபமாகக் கிடைக்கின்றன. அருகாமையிலுள்ள சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்டின் கிளையையோ, அவர்களுடைய விநியோகஸ்தர்களையோ அணுகுங்கள்.




1600° சென்டிக்ரேட் வரை வெப்பத்திற்கு

**தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட். ●**

**தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிட்.**

everest/74a/ACC tm

# திடுதிப் விளம்பரங்கள்!



'பல் அழகே பல அழகைத் தரும்' என்ற தலைப்பில் காட்டப்படும் பற்பசை விளம்பர சினிமாவும், 'தலைவனுக்கு அழகு தலையில் இருக்கிறது' என்ற வாக்கியத்துடன் ஆரம்பிக்கும் 'ஹேர் கிரீம்' விளம்பர சினிமாவும் 'ஒய்ச்சலை ஒழிக்கும் ஒப்பற்ற பானம் ஓட்டோமால்ட்' என்ற குட்டி விளம்பரப் படமும் தியேட்டர்களில் பார்த்துப் பார்த்து அலுத்துப் போனவையே!

குறிப்பிட்ட தாடி டாக்டரைக் கொண்டே பல குட்டி சினிமாக்களை உருவாக்கும் 'மாத்திரை திலகம்' மாத்ருபூதம், தன் மினி சினிமாக்களுக்கு ஏன் அந்தக் குறுந்தாடி டாக்டரையே திரும்பத் திரும்பப் பயன்படுத்துகிறார் என்பதைப் பொதுமக்கள் இன்னும் ஆலோசித்து வருகிறார்கள்! 'கவரிங்' நகைகளுக்குச் சில குறிப்பிட்ட நகைகளையே 'கவர்' பண்ணுவதும் இன்றைய சினிமா விளம்பரங்களில் காண்கிறோம். இதனால் 'தலைவலியா?' என்று வெள்ளித் திரையில் ஆரம்பமானவுடனே 'ஆமாம், இந்த விளம்பரம் தலைவலி தான்' என்று முணுமுணுக்காதவர்கள் சிலர்தான்!

இந்தக் குட்டி விளம்பரங்களை எல்லாம் பார்த்து முடிப்பதற்குள், பார்க்க வந்த படத்தை ரசிக்க முடியாதபடி ஆகிவிடும்!

தாங்கள் தயாரிக்கும் பொருட்களைச் சினிமா மூலம் விளம்பரம் செய்ய விரும்பும் தயாரிப்பாளர்கள் தங்கள் பொருட்களைப் பற்றிய விளம்பரங்களைத் தனியே காண்பிக்காமல், வெளியிடப்படும் படத்திலேயே நுழைத்துவிட வேண்டும். தியேட்டர் சொந்தக்காரர்களுக்குப் பணம் தராமல், சினிமாப் படத் தயாரிப்பாளர்களிடமே கொடுத்து விட்டால் படத் தயாரிப்பாளர்களுக்கு நிறையப் பணம் கிடைத்துவிடுமல்லவா? அவர் விநியோகஸ்தர்களிடம் பணத்துக்காகக் கையேந்தி நிற்க வேண்டாமல்லவா? அதுமட்டுமா? என்ன கதையை வைத்துப் படம் பிடிப்பது என்று படாதிபதிகள் மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டியதில்லை. விளம்பரதாரர்களின் விருப்பத்துக்கிணங்க முதலில் தலைவலி மாத்திரைக் கதையாக ஆரம்பித்துப் பிறகு சக்தி வேலியக் கதையாகத் தொடர்ந்து, அழகு வதன சோப் கதையாக முடித்து விடலாம். எவ்வளவு சௌகரியம் பாருங்கள்! சினிமா பார்க்கப் போகும் நபருக்குக் குட்டி விளம்பரக் காட்சிகளைப் பார்க்காமல், பார்க்க வந்த சினிமாவிலே எந்த விளம்பரம் எப்பொழுது வரும் என்று தெரியாமல், ஒரு சஸ்பென்ஸ் இருக்கும்! சில சமயங்களில் பார்க்க வந்த சினிமாப் படத்தை விட, விளம்பரம் புகுத்தப்பட்ட இடம் நன்றாகவும் அமையலாமே!

இன்னும் சற்று விளக்கி உதாரணத்துடன் சொல்கிறேன்:

'சஸ்பென்ஸ்' நிறைந்த ஒரு சினிமா பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். இதில் எப்படி விளம்பரத்தைப் பயன்படுத்தலாம் என்று பாருங்கள்.

இருட்டு நிறைந்த ஓர் அறை. பல பீப்பாய்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. தூசியும் புழுதியும் நிறைந்திருக்கின்றன; வழக்கமாக இசைக்கப்படும் 'சஸ்பென்ஸ்' இசை ஒலிக்கிறது. வில்லன் ஒரு பீப்பாயின் பின்னால் மறைந்து கொள்கிறான்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் நுழைகிறார். அவர் கையில் ஒரு துப்பாக்கி. அவருக்குப் பெருத்த ஏமாற்றம். திரும்பிப் போய் விடலாம் என்று திரும்பும் சமயத்தில் அவர் மூச்சை ஒரு முறை இழுக்கிறார்.

''ஹா... ஹா... வெளியே வா. நான் மூன்று எண்ணுவதற்குள் வெளியே வா.''

இன்ஸ்பெக்டர் கர்ஜிக்கிறார். இரண்டு முறை டுமீல்! டுமீல்!

வில்லன் கையிலிருந்த துப்பாக்கியைக் கீழே எறிந்து விட்டு, சரணடைகிறான்.

''என்னை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்? நான் அங்கே இருக்கிறேன் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' வில்லன் பரிதாபமாக, ஆச்சரியத்துடன் இன்ஸ்பெக்டரைக் கேட்கிறான்.

''ஓ! அது ரொம்ப சுலபம்... உன் வாயின் துர்நாற்றத்தால் நீ இருக்கும் இடத்தைச் சீக்கிரமாகக் கண்டுபிடிக்க முடிந்தது!... நீ பல கஜங்கள் தள்ளி யிருந்தபோதிலும் உன் வாய் துர்நாற்றமே உன்னைக் காட்டிக் கொடுத்து விட்டது!...''

வில்லன் தடுமாறுகிறான். மனம் உடைந்து போகிறான். அப்பொழுது இன்ஸ்பெக்டர் அவன் முதுகில் தட்டி, ''நீ என்னிடமிருந்து தப்பியிருக்கலாம், 'டென்டோ டூத் பேஸ்ட்'டைப் பயன்படுத்தி யிருந்தால்! ஏனென்றால்



அதில் விசேஷ மருந்தான 'சுகந்தோபில்' கலந்திருக்கிறது!'' என்கிறார்.

''உண்மையாகவா?'' — இது வில்லன்.

''ஆமாம். நிச்சயமாக'' என்று பளிச்சென்று சிரித்துக் கொண்டே சொல்கிறார் இன்ஸ்பெக்டர். ''அந்த டென்டோ பேஸ்ட் மூன்று வித சைஸ்களில் கிடைக்கிறது. மறைந்து கொள்ள வேண்டுமென்றால், மறக்காதே டென்டோ டூத் பேஸ்ட்!''

இன்ஸ்பெக்டர் வெளியேறுகிறார், வில்லனுடன்.

எப்படி இந்த விளம்பரம்?

மற்றொரு காட்சி:

செக்கர் வானம் போலிருக்கிறது வண்ணப் படம். இரு புள்ளிகளைப் போலத் தெரியும் பொருட்கள், வரவரப் பெரிதாகி, பெரிதாகி... ஓ! கதாநாயகனும், கதாநாயகியும்!

கதாநாயகியைத் துரத்திக் கொண்டு ஓடி வருகிறான், கதாநாயகன். பாட்டு? ஓ! தாராளமாக உண்டு! உரத்த குரலில் பாடுகிறார்கள். ரோஜாச் செடிகளையும் சில மரங்களையும் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். பாட்டு முடியும்வரையில்!

பெருமூச்சுடன் புல் தரையில் விழுகின்றனர்.

''கண்ணே! அன்பே! என்ன ஓட்டம் ஓடுகிறாய் நீ!'' என்று காதலியின் கன்னத்தைத் தட்டுகிறான் காதலன். ''நான் களைத்துப் போய்விட்டேன்!''

''ம்ஹூம்... இவ்வளவுதானா நீங்கள் என்னைக் காதலிப்பது? இரண்டு பாட்டுக்கள் தான். அதற்குள் ஓய்ந்து விட்டீர்களே!'' சிணுங்குகிறாள் காதலி.

''நீ மிகவும் சக்தி வாய்ந்தவள். உன் உருவத்தைப் பார்க்கும்பொழுது உன்னுடைய சக்தி... அப்பப்பா! உனக்கு எப்படி அவ்வளவு சக்தி வந்தது?...''

''ஃபேட்டோ மால்ட்... பலசாலிகளின் பலநாள் நண்பன்... சக்தி தரும் காமதேனு. நான் தினமும் மூன்று முறை சாப்பிடுகிறேன்!''

''உண்மையாகவா?'' — காதலன்.

''நிச்சயமாக. என்னுடன் இணைந்து ஓடி வர வேண்டுமென்றால், நீங்கள் 'ஃபேட்டோ மால்ட்' அருந்த வேண்டும். கைக்கு அடக்கமான சிறு டின்களில் கிடைக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டே, தன் டம்பப் பையிலிருந்து ஒரு டின்னை எடுத்துக் காட்டுகிறாள். பிறகு அந்தப் பானத்தைக் கரைத்துத் தருகிறாள். அவனும் அதை ரசித்துக் குடித்து விட்டு, ''ம்ம்...ரொம்ப ருசி.'' என்று சொல்லும்போது அடுத்த பாட்டுக்கான — அடுத்த ஓட்டத்துக்காக—பின்னணி இசை கேட்கிறது.

''எப்பொழுதும் நினைவில் வையுங்கள் — 'ஃபேட்டோ மால்ட்'' என்கிறாள் காதலி!

மறுபடியும் ஒருவரை யொருவர் துரத்த, மீண்டும் புள்ளிகளாக மறைந்து விடுகிறார்கள்!

இப்படிப் பல விதங்களில் விளம்பரத்தைப் படத்துடனே இணைத்து விடலாம்.

குழந்தை நட்சத்திரம், 'தொட்டில் மார்க்' பால் பவுடரையே கேட்பதாகக் காட்டலாம்! கதாநாயகன், 'சாட்டை மார்க்' பெல்ட்களையே வில்லனை அடிக்கப் பயன்படுத்தலாம். 'ஏ-ஒன்' 'டை'களையே பயன்படுத்திக் கதாநாயகன் தூக்குப் போட்டுக் கொள்ளலாம்.

புடவைகளையும், ரவிக்கைத் துணிகளையும் விளம்பரப்படுத்தச் சொல்லியா தெரிய வேண்டும்?

சினிமாக்களில் இப்படியொரு "புரட்சி" செய்தால் என்ன?

ஆதாரம்:

'ஆதம் அண்ட் ஈவ்' பத்திரிகையில் ஒரு கட்டுரை. — பாமா கோபாலன்

## குல தெய்வத்தைக் கடைசியாகத் தரிசித்தார்!



மதப்பற்று மிகுந்த பெற்றோர்களுக்குப் பிறந்தவர் அண்ணா. இளமையில் நாள் தவறாமல் பிள்ளையார் கோவிலுக்குப் போவதுண்டு.

திருத்தணி முருகன் இவரது குடும்பத்தின் குல தெய்வம். சென்ற அக்டோபர் 3ந் தேதி திருத்தணி ஆலயத்தின் மலைப் பாதையைத் திறக்கும் நிகழ்ச்சியில் பங்குகொள்ளச் சென்ற போது அண்ணா திருத்தணி முருகனைத் தரிசித்தார்.

### ''சௌமியன் யார்?''

'சௌமியா' (தமிழ் வருடம்)வில் பிறந்தவர் இவர். இதையே புனைப்பெயராக வைத்து 'சௌமியன்' என்று அவர் கதைகள் எழுத ஆரம்பித்தார். இவருடைய முதல் கதை அமிர்த குண போதினி சஞ்சிகையில் வெளியாயிற்று. தம் பிறந்த ஊரின் பெயரை வைத்தே இவர் சஞ்சிகை நடத்தினார். யார் இவர் என்பது தெரியவில்லையா? அண்ணா அவர்கள்தான்.

- நஜன்

# தலைவலியா?



# அவேதன்



## சாப்பிட்டு உடனடியாக நிவாரணம் பெறுங்கள்

**SQUIBB**

SARABHAI CHEMICALS

® இ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பொரேடட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். சாம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமைபெற்றவர்கள்



அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன தலைவலி, ஜலதோஷம், ப்ளூ மற்றும் இதர சாதாரண வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது

Shilpi SC A/67 Tam




செல்வத்துக்கு அந்த ஆசை இடீரென்று ஒரு சந்தர்ப்பத்தில் தோன்றி வேரூன்றி விட்டது. அந்தச் சந்தர்ப்பம் தான் இங்கே முக்கியம்.

கல்லூரியில் ஆண்டு விழா ஏற்பாடு ஏக தடபுடலாக நடந்து கொண்டிருந்தது. தனித் தனியாகவும், பகுதி பகுதிகளாகவும், கலை-நிகழ்ச்சிகள், சங்கீதப் போட்டிகள், பேச்சுப் போட்டிகள், நாடகம் என்று இப்படிப் பலவிதமான ஏற்பாடுகளில் செல்வத்தின் நாடக நிகழ்ச்சியும் ஒன்று. அந்த நாடகம் அவனுக்கென்று அவனே எழுதித் தயாரித்து. அதில் பிரதம பாகத்தில் தானே நடிக்கவும் தயார்ப்படுத்திக் கொண்டான். அவன் எழுதிய அந்த நாடகம் ஒரு கவிஞனைக் கதாநாயகனாகக் கொண்டது. செல்வத்துக்கு ஓசை நயம் மிக்க கவிதைகள் எழுதும் திறமை ஓரளவு உண்டு. எனவே, கவிஞனைக் கதாநாயகனாக வைத்து அவன் எழுதித் தயாரித்த நாடகத்துக்குக் கவிதைகளையும் அவனே எழுதிக் கொண்டது ஆச்சரியமான விஷயமில்லை.

சுலபமாகப் பாடம் பண்ணக் கூடிய நல்ல ஓசை நயத்தோடு நான்கைந்து கவிதைகளை எழுதி அதை எவ்வித தங்கு தடையுமின்றி மேடையில் பாடவும் தன்னைத் தயார்ப் படுத்திக் கொண்டான்.

நாடகம் தயார். கதாநாயகன் வேஷத்துக்குச் செல்வமும் தயார். மற்ற ஏற்பாடுகளும் துரிதமாகத் தயாராயின.

அன்று இரவு கல்லூரி தின நாடக விழாவுக்கு உள்ளூர் சினிமா அதிபர் ஒருவரைத் தலைமை தாங்க அழைப்பதாக முடிவு செய்யப்பட்டு அவர் தலைமையில் நாடகம் நடந்து முடிந்தது.

இடைவேளைக்கு முன்பே தலைமை தாங்கிய சினிமா அதிபர் கதாநாயகனாக நடித்த செல்வத்தை வாயாரப் புகழ்ந்து விட்டுப் போய் விட்டார்.

கவிஞர் வேஷத்தில் தோன்றி நடித்த செல்வம் என்ற மாணவர் மிக நன்றாக நடித்தார். கவிதைகளும் அவர்தான் எழுதியதாக இங்கே சொன்னார்கள். அது மிகவும் பாராட்டப்பட வேண்டிய விஷயம். இவ்வளவு துடிப்புள்ள வாலிபர்கள் எதைச் செய்தாலும் வெற்றியுடன் செய்வார்கள்

என்பதற்கு இந்த மாணவருடைய முயற்சியே ஒரு சான்று.... — என்று மிகப் பெரிய வார்த்தை யொன்றை அங்கிருந்த குதூகலமான சூழ்நிலையை அநுசரித்துச் சொல்லி விட்டுப் போய் விட்டார். அவர் போன பின்பு அந்தச் சினிமா அதிபரின் வலது கை, இடது கை என்று சொல்லக்கூடிய ஏதோ ஒரு கையான அந்தரங்கக் காரியதரிசி மட்டும் நாடகம் முடியும் வரை அமர்ந்திருந்து, பின் அவரும் விடைபெறும் போது சூழ்ந்து நின்ற மாணவர் கூட்டத்தில் செல்வத்தைப் பாராட்டி விட்டுப் போய்ச் சேர்ந்தார்.

கல்லூரிப் பட்டப் படிப்பை முடித்து விட்டு வெளியே வந்த செல்வத்தின் இளமை உள்ளத்தில் சின்னஞ்சிறு சபலமாக எழுந்த சினிமா ஆசை ஒரு லட்சிய வெறியாக உரம் பெறத் தொடங்கிய சந்தர்ப்பத்தில் அவன் பி. ஏ.வில் தேறி விட்டான். படிப்பில் வெற்றி பெற்றுவிட்ட சந்தோஷம், சினிமா அதிபரின் வார்த்தைகளினால் உண்டான ஆசை, அதோடு நண்பர்களின் இடையறாத தூண்டுதல், எல்லாமாக அவனது சினிமா ஆசையை இன்னும் அதிகம் வளர விட்டு விட்டன.

செல்வம் சினிமாவில் கதாநாயகனாக நடிக்குமளவுக்கு 'பர்சனாலிடி' உடையவன் அல்ல. பார்வைக்கு ஒரு வாலிபனின் சராசரி உருவ அமைப்பைவிடக் கொஞ்சம் பளிச்சென்று தெரிவான். அதிகமான உயரமுமில்லை. சினிமாவில் கதாநாயகனாக நடிக்கக்கூடிய அளவுக்குத் தனக்கு உடற்கட்டு இல்லை என்பதை அவனிடம் மிக வேகமாக வளர்ந்து விட்ட அந்தச் சினிமா ஆசை ஏற்றுக் கொள்ளவோ, நினைத்துப் பார்க்கவோ மறுத்து விட்டது. இந்த மறுப்பின் முனைப்பிலே உண்டான அசாதாரணமான துணிவு தான் சினிமா அதிபரின் உதவியாளரான சேதுராமனிடம் கொண்டு போய் ஒரு நாள் நிறுத்தி விட்டது அவனை.

சேதுராமனின் வீடு! கதவு திறந்திருந்தது!

''என்னை நினைவிருக்கிறதா, ஸார் ?''

''நினைவில்லாமல் என்ன, சேலம் கல்லூரி ஆண்டு விழாவில் கவிஞனாக நடித்து....''

செல்வத்துக்குப் பரம சந்தோஷம். இவ்வளவு நாள் ஒரு சம்பவத்தை இவரைப் போன்ற பெரிய மனிதர்கள் நினைவில் வைத்துக் கொள்வதென்றால் அந்தச் சம்பவம் எவ்வளவு ஆழமாக இவர் மனத்தில் பதிந்திருக்க வேண்டும் ?

''நான் பி. ஏ. பாஸ் செய்துவிட்டேன், ஸார் !''

''ரொம்ப சந்தோஷம். உட்கார் !''

தயக்கத்துடன் உட்கார்ந்தான் செல்வம். பேச்சை எப்படித் தொடங்குவது என்ற சிறு தடுமாற்றத்துக்குப் பின் ஒரு மாதிரியாக விஷயத்தைத் தொடர்ந்தான்.

''உங்களிடம் ஒரு யோசனையும், அதைச் செயல்படுத்தும் அபிப்பிராயமும் கேட்கலாம் என்று வந்தேன்.''

''ஓ.... ஹோ....! அப்படியா?.... கேளேன்.....!''

சேதுராமன் உற்சாகமாக ஊக்குவித்த விதம் செல்வத்தின் தைரியத்தை அதிகமாக்கியது. தனது சினிமா ஆசையைத் தயங்கித் தயங்கிக் கூறி முடித்தான்.

சேதுராமன் சற்று நேரம் மௌனமாக அமர்ந்திருந்தார். அவர் பார்வை கதவுக்கு வெளியே சிறிது நேரம் லயித்திருந்தது. அந்த இடைவேளையையும் செல்வம் பயன்படுத்திக் கொண்டான்.

''நன்றாகக் கவிதைகள் எல்லாம் எழுதுவேன் ஸார்! கல்லூரி நாடகங்களில் எல்லாம் நடித்து நிறையப் பரிசுகள் எல்லாம் வாங்கியிருக்கிறேன்.''

சேதுராமன் பதில் ஏதும் சொல்லாமல் தலையை மட்டும் ஆட்டினார்.

''ஆகட்டும், செல்வம், உன்னுடைய ஆர்வத்தை நான் பாராட்டுகிறேன். அதிபர் பிரபாகர் நான் சொன்னால் கேட்பார். ஒரு சந்தர்ப்பம் வரட்டும். உன்னைப் பற்றிச் சொல்லுகிறேன். எத்தனையோ 'ரோல்'களுக்கு நாங்கள் வெளியிலிருந்தும் சென்னை எக்ஸ்ட்ராக்களையும் தருவித்து வேலை கொடுக்கிறோம். உன்னுடைய தகுதி, திறமை இவைகளை மனத்தில் கொண்டு நல்ல முறையில் உன்னைப் பயன்படுத்திக் கொள்ள என்னால் இயன்றதைச் செய்கிறேன். என்ன?''

''ரொம்ப நன்றி சார்.''

''இப்பொழுதுகூட சென்னைக்குத்தான் புறப்பட்டுக் கொண்டிருக்கிறோம். அடுத்த தயாரிப்புக்கான ஆர்டிஸ்ட்களை புக் பண்ணி விட்டு வரலாம் என்று. அதிபர்கூட வந்து விடுவார்.''

சேதுராமன் எழுந்தார். கூடவே செல்வமும் எழுந்தான். விடை பெற்றான்.

தனது முதல் முயற்சியே பிரமாதமான வெற்றியைத் தந்துவிட்டதாக நினைப்பு செல்வத்துக்கு. நண்பர்களிடமெல்லாம் இந்த முதல் சந்திப்பைப் பற்றி ஓயாது பேசிக் கொண்டிருந்தான். சேதுராமன் மனம் வைத்தால் அந்த ஸ்டுடியோவில் என்ன வேண்டுமானாலும் செய்யலாமாம். அவர் வார்த்தைக்கு மறுப்பே அங்கு கிடையாதாம் — என்று இப்படிச் சில கற்பனை யூகங்களையும், நண்பர்களிடம் கூறி அந்தக் கற்பனையில் அவர்களைத் திகைக்க வைத்து அந்தத் திகைப்பில் தன்னைப் பற்றியதொரு பரபரப்பையும் வெளியே பரப்பிக் கொண்டிருந்தான் செல்வம்.

சேதுராமனுடன் பேசிவிட்டு வந்தபின், அவனுடைய வெளித் தோற்றத்தில் இலேசான மாறுதல் தென்பட்டது. உடை, பாவனை இவைகளில் ஏற்பட்ட மாறுதல் அவனது கனவு படரும் விதத்தைத் தெளிவாகவே உணர்த்தியது. உடம்பைப் பிடித்த மாதிரி உடை. கைமுஷ்டி வரையில் மடக்கி விடப்பட்ட நிலையில் பனியன் மாதிரியான டி ஷர்ட். 'டைட் பேண்ட்'. காலில் கூரான பாத அணி. இரண்டு காதோரங்களில் மட்டுமே வாரிவிடப்பட்டு நடுத்தலையெல்லாம் அலைந்து கிடக்கும் கேசம். ரொம்பவும் செயற்கைத்தனமான — ஏதோ ஒரு சினிமா முன்னணி நடிகரை நினைவுபடுத்தும் நடை. நிற்கும்போதும், உட்காரும்போதும், பேசும்

போதும் தானாகக் கற்பனை செய்து கொண்ட அசட்டுத்தனமான முக பாவங்கள். தன்னைப் பற்றித் தானே கொண்டுள்ள உள் அபிப்பிராயங்களைப் பிரதிபலிக்கும் செய்கைகள்.

அவனிடம் இருப்பது பாதியும், உண்மையைவிடத் தனக்கு அதிகம் இருப்பதாக அவன் நினைத்துக் கொண்டிருக்கிற கற்பனைத் தகுதிகள் ஏராளமாகவும் சூழ்ந்து கொண்டன.

**க**தவு திறந்திருந்தது!

ஜன்னலுக்கு மேல் தலை தெரிந்தது. பத்து நாள் இடைவெளியில் அவ்வழியே போகும் போதெல்லாம் மூடிக் கிடக்கும் அவர் வீட்டைப் பார்ப்பான். அவர் ஊரில் இருக்கிறார் என்றால் அவர் இருக்கும் வீட்டின் மேல் ஜன்னல் திறந்திருக்கும் என்பதை அவன் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தான்.

''சென்னையிலிருந்து எப்போ வந்தீங்க ?''

கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான் செல்வம்.

''ராத்திரிதான் வந்தேன் '' என்றவர்....''ஒரு பத்து நாளா ஒரே 'பிஸி'. கதை டிஸ்கஷன், ஆர்டிஸ்ட் புக்கிங், லொகேஷன் தேர்வு, என்று ஓய்வு ஒழிவேயில்லை. ஒரு சந்தர்ப்பம் வரட்டும், உன்னைப் பற்றி அவசியம் பிரபாகரிடம் கூறுகிறேன். எப்படியும் உனக்கொரு நல்ல 'சான்ஸ்' வாங்கிக் கொடுக்கிறேன். என்ன?''

''ரொம்ப நன்றி சார் !''

சேதுராமனின் இவ்வார்த்தைகள் தந்த உற்சாகத்துடன் நண்பர்களுடன் குதூகலமாக வளைய வருவான். தினம் அவன் அவ்வழியே சேதுராமனின் வீட்டைத் தாண்டித்தான் போயாக வேண்டும். கதவு திறந்திருக்கும் போதெல்லாம் உள்ளே நுழைய மாட்டான். நீண்ட நாள் இடைவெளி விட்டுத்தான் தலையைக் காட்டிவிட்டு வருவான். அவ்வழியே அவர் வீட்டைத் தாண்டும் போதெல்லாம் தன்னிச்சையாக அவன் பார்வை திறந்திருக்கும் அக்கதவைப் பார்த்துத் திருப்தியும் நம்பிக்கையும் பெறும்.

**மா**லை நேரம் !

தெரு முனையில் தனியே நின்று கொண்டிருந்தான் செல்வம்.

சேதுராமனைப் பார்த்துவிட்டு வந்து ஒரு வாரத்துக்கு மேலாகப் போகிறது. படப்பிடிப்பு தொடங்கி விட்டதாகப் பேசிக் கொண்டார்கள். அவர் அதிகம் வீட்டில் தங்குவதில்லை என்பதை மூடிக் கிடக்கும் அவர் வீட்டின் ஜன்னலைப் பார்த்துப் புரிந்து கொண்டான்.

அவனைத் தாண்டிச் சினிமா அதிபர் பிரபாகரன் அவர்களின் கார் சென்றது. அதிபர் அருகில் சேதுராமன் அமர்ந்திருந்தார். தெரு முனையில் தனியே நிற்கும் செல்வத்தைப் பார்த்துச் சேதுராமன் புன்னகை செய்து விட்டுப் போனார்.

செல்வத்தின் கனவு மடலில் ஓர் இதழ் பிரிந்தது;



''பக்கத்து வீட்டுக்காரர் குடைதான் கிழிஞ்சிருக்கு. ரிப்பேர் செஞ்சு கொடுத்துட்டுப் போப்பா; ரொம்ப உபயோகமாக இருக்கும் !''

---

''இப்பொழுது அதிபருடன் செல்லும் சேதுராமன் என்னைப் பார்த்துப் புன்னகை செய்து விட்டுப் போனாரே. நிச்சயமாகக் காரில் அருகில் அமர்ந்திருக்கும் அதிபர் பிரபாகரனிடம், 'இப்பொழுது அங்கே என்னைப் பார்த்துப் புன்னகை செய்தானே ஒரு பையன், அவன் நம்ம பையன். இந்தத் துறையில் நுழைய ஆர்வப்படுகிறான். நன்றாகக் கவிதை எழுதுகிறான். கவிஞனாக நடித்த அவனுடைய நாடகமொன்றைக்கூட நாம் சமீபத்தில் பார்த்துப் பாராட்டியிருக்கிறோம். அவனுக்கு ஒரு சான்ஸ் கொடுத்தால் நல்ல முன்னுக்கு வருவான்....' என்று கூறுவார். 'அப்படியா! உடனே அழைத்து வாருங்கள். இதைப் போல ஆர்வமுள்ளவர்களை நாம் கட்டாயம் உபயோகப்படுத்திக் கொள்வோம். நல்ல 'ரோல்' ஒன்று கொடுத்து 'டெஸ்ட்' பண்ணுவோம்' என்று அதிபர் கூறுவார், கூறியிருப்பார். ஒரு வேளை நாளைக்குக் காலையில் அவ்வழியே அவர் வீட்டைத் தாண்டிப் போகும் போது ஜன்னல் வழியே தன்னைக் கூப்பிட்டாலும் கூப்பிடலாம் இல்லையா ?''

பச்சைக் கனவுகளோடு வீட்டுக்கு வந்த போது தாயார் அவனிடம் சலித்துக் கொண்டாள்.

நான்கைந்து இடங்களிலிருந்து நல்ல வேலைக்கு இண்டர்வ்யூ வந்தும் அவன் போகவில்லை. சினிமா ஆசையில் அவைகளை உதறி விட்டான். அரும்பாடு பட்டுக் கடனை வாங்கி, நகைகளை விற்று, படிக்க வைத்து, அதன் அடுத்த பலனை எதிர்பார்த்துக் கொண்டிருக்

# திட்டமிட்ட குடும்பமே திடமான குடும்பமாகும்













**குழந்தை பிறப்பதை உன்னால் தடுக்க முடியும். நிரோத் உபயோகி.**

## "நிரோத்"

மூன்றின் விலை 15 பைசா • ஒன்றின் விலை 5 பைசா

அரசாங்க ஆதரவு விலையில் கிடைக்கிறது

இப்போது சில மாவட்டங்களில் மட்டும் கிடைக்கின்றன

சென்னை நகரில் இப்பொழுது கிடைக்கிறது.

ிற அந்த வயோதிகப் பார்வையில் ஏக்கம் தெரிந்தது.

''நீ சினிமாவிலே சேர்ந்து வாரிக் கொழிடா. காரா வாங்கு. எஸ்டேட்டா வாங்கு. ரொம்ப சந்தோஷம்தான். ஆனால் அதிலே சந்தர்ப்பம் வரும் வரையிலே யாவது, ஒரு நல்ல வேலையாகத் தேடிப் போகக் கூடாதா? வீட்டோட நிலைமை தெரியாமே இப்படிப் பைத்தியம் பிடிச்சு அலையறையே. உன்னைப் படிக்க வைக்க நான் எவ்வளவு சிரமப்பட்டிருப்பேன் தெரியுமா ? உன்னையோர் ஆளாக்க நான் எடுத்துக் கொண்ட சிரத்தையைப் புரிஞ்சுக்காத வறு இருக்கியேடா செல்வம். உன்னோட ஆர்வத்தை நான் குறைவா மதிப்பிடறதாக நினைக்காதே. ஓர் இடத்தில் காலே ஊன்றிக் கொண்டு நன்றாக நின்றபின்தான் இன்னொரு பிடிப்புக்குக் கையை மேலே தூக்கணும். கால் நிக்கறத்துக்கே இடம் கிடைக்காத நிலையிலே....'' தாயாரின் சலிப்பை அவன் பொருட்படுத்தவில்லை. அதை ஒரே வரியில் முறியடித்து விட்டான்.

''...லட்சியம் ஒன்றாக வைத்துக் கொண்டு அதற்குக் குந்தகமாகச் செயல்படும் வேறு ஒன்றை மேற்கொண்டால் பின்னால் ரொம்பத் தொல்லை வரும் அம்மா. ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒரு கால் என்று தடுமாற வேண்டிய கட்டம் வந்தால், குழப்பம் இன்னும் அதிகமாகிவிடும்.''

அவன் சொல்வதுகூடச் சரியாகத்தான் பட்டது அவனுக்கு.

**கூ**ட்டு இறந்திருந்தது !

ஞாயிற்றுக்கிழமை.

செல்வத்தை உற்சாகமாக வரவேற்று விட்டு ஏற்கனவே அங்கு வந்து அமர்ந்திருக்கும் மற்றொருவருடன் பேசிக் கொண்டிருந்தார் சேதுராமன். அவருடன் பேசும் பேச்சிலிருந்து சினிமா உலகில் அவர் ஒரு முக்கியமான 'புள்ளி' என்பதை யூகிப்பது செல்வத்துக்குச் சிரமமாக இல்லை.

தொழில்முறை பற்றியும், பொருளாதாரம் பற்றியும், பல பெரிய நடிகர்களின் புதிய காண்ட்ராக்டுகள் பற்றியும், ஒரு நடிகையின் திடீர் கர்ப்பத்தினால் பாதிக்கப் பட்டுவிட்ட சில படங்கள் பற்றியும் பேச்சு சுவாரசியமாகப் போய்க் கொண்டிருந்தது.

இவரைக் கடைசியில் நிச்சயமாகத் தனக்கு அறிமுகப்படுத்தி வைப்பார். பேச்சின் நடுவில் அடிக்கடி சேதுராமன் தன்னைப் புன்னகையுடன் பார்ப்பதிலிருந்து அந்த யூகத்தில் அவன் அமர்ந்திருந்தான். ஆனால் அந்த யூகம் பொய்த்து விட்டது. வந்தவர் பேசிக் கொண்டிருந்துவிட்டு விடைபெற்றுப் போய் விட்டார். அவனது உள் மனத்து ஏக்கங்கள் யூகங்களாகவே கருகி உதிர்ந்த சலனத்தைச் சேதுராமன் உணரவில்லை.

மீண்டும் அதே உற்சாகமான சம்பாஷணை விடைபெற்றுச் சென்றவர் பேசிய சாயலில் மற்றொரு கோணத்திலிருந்து.

'பிலிம் தொழில் ரொம்ப அற்புதமான தொழில்தான். மிகச் சிறந்த மீடியம். இதை








—கருத்து : பாபு

வைத்துக் கொண்டு வி கேன் டூ ஒண்டர்ஸ் — யார் உணர்கிறார்கள்? வகைதொகை இல்லாமே செலவு செய்கிறார்கள். உருப்படியா எதையும் செய்ய முடியாமல் அவனவன் ஒரு தனித் தனிக் குழுவை வச்சுக்கிட்டுப் 'பீல்டை'க் கெடுக்கிறார்கள். இதிலே ஏகப்பட்ட 'பாலிடிக்ஸ்' என்று ஒரு பெரிய சம்பாஷணைத் தொடரைத் திசை திருப்பி அதில் செல்வத்தையும் பங்கு கொள்ள வைத்து அவர் தம் நெருக்கத்தைச் செல்வத்துடன் அதிகமாக்கிக் கொண்டதுபோல் காண்பித்துக் கொண்டார். அது கொடுத்த சிறு மயக்கத்தில் செல்வம் பூரித்துப் போய் அமர்ந்திருந்தான்.

''நான் அடுத்த வாரம் சென்னை போகிறேன். போய் வந்ததும் உன்னைப் பிரபாகரிடம் அழைத்துப் போகிறேன். என்ன ? அப்படியே சென்னையில் எங்கேனும் உன்னைப் பற்றிச் சொல்லச் சந்தர்ப்பம் கிடைத்தாலும் சொல்லுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தார் சேதுராமன்.

புன்னகையுடன் செல்வம் விடைபெறும் போது ஓரளவு தான் தன் லட்சிய எல்லையை நெருங்கிக் கொண்டிருக்கிறோம் போலத் தான் இருக்கிறது என்று எண்ணிக் கொண்டான்; இவ்வளவு நாட்கள் காத்திருந்தவ

னுக்கு இன்னும் ஒன்றிரண்டு வாரம் அவ்வளவொன்றும் பெரிதில்லையே !

**சா**தவு மூடியிருந்தது.

சேதுராமன் சென்னை போயிருந்தார். நாட்கள் நகர்ந்தன. போகும் போதும், வரும் போதும் செல்வத்தின் பார்வை திறக்கப் போகும் அந்தக் கதவுக்காகக் காத்திருந்தது. நாட்கள் செல்லச் செல்ல அவனது துடிப்புக்கள் அதிகமாகிக் கொண்டிருந்தன. பலவேறு வாலிபப் பருவத்து அருமையான கனவுகளை அவனது இளம் உள்ளத்தில் வளரவிட்ட சேதுராமன் சென்னையிலிருந்து இன்னும் திரும்பவில்லை. தன்னுடன் பேசும் போது அவர் காட்டுகிற அன்பு. ஆசையுடன் அவர் விடை கொடுத்தனுப்புகிற பாங்கு நம்பிக்கை தரும் வார்த்தைகள். இதோ, அதோ என்று அந்தச் சந்தர்ப்பம் அருகில் வந்துவிட்டது போல் அவர் கூறுகிற மிகக் குறுகிய காலத் தவணைகள், எல்லாம் அவனுக்கு மனத்தில் புல்லரிப்பைத் தந்தன !

மற்றவர்கள் அநுபவம் போல அல்ல, அவன் அநுபவம். சினிமாவில் சேர்த்து விடுகிறேன் என்று சொல்லி மோசடி செய்யப்பட்டு ஏமாற்றமடையும் சந்தர்ப்பமும் அவனளவில் வராது என்ற நம்பிக்கை அவனுக்கு. ஏனென்றால், சேதுராமன் அந்த மாதிரி வகையில் ஒரு சந்தர்ப்பத்தில்கூட நடந்து கொள்ளவில்லை. அப்படிச் செய்கிறவராகவும் அவர் படவில்லை. அந்த அளவில் செல்வத்துக்குத் திருப்தியும், நம்பிக்கையும் வளர்ந்து விட்டன.

**கா**தவு திறந்திருந்தது !

சேதுராமன் சென்னையிலிருந்து வந்துவிட்டார். ஜன்னலுக்கு அப்பால் தலை தெரிந்தது.

''சமான்!.... வாப்பா!....'' எவ்வளவு உற்சாகமான வரவேற்பு !

செல்வம் உள்ளே நுழைந்தான். அவரை அன்பு ததும்பப் பார்த்தார். அவரது பார்வையில் அளவுக்கு மீறிய வாஞ்சையும், பரிவும் இருந்தன. ஆனால்.... ஆனால்... செல்வம் எதிர்பார்த்த அந்த நம்பிக்கை....

''என்னை மன்னிச்சுடு, செல்வம். என்னால் உன் விருப்பத்தை நிறைவேற்ற முடியாதவனாகிவிட்டேன். நான் இப்போ அந்த ஸ்டுடியோவில் அதிபர் பிரபாகருக்குக் காரியதரிசி இல்லை. சென்னையிலிருந்து ராஜிநாமாக் கடிதம் எழுதிப் போட்டுட்டேன். ஓர் ஆர்ட்டிஸ்ட் காண்ட்ராக்டிலே எனக்கும் அவருக்கும் தப்பபிப்பிராயம் வளர்ந்து விட்டது. அவரை நம்ப வைப்பது ரொம்ப சிரமம் என்று தோன்றவே ராஜிநாமா தவிர்க்க முடியாததாகிவிட்டது. அதோடு இந்தத் தொழிலுக்கே முழுக்குப் போட்டு விட்டு ஒரு மின்சாரச் சாமான் கடை வைக்க ஏற்பாடு செய்துவிட்டு வந்துவிட்டேன்......''

செல்வம் மிகப் பெரிய ஏமாற்றத்துடன் வெளியேறிக் கொண்டிருந்தான். அடேயப்பா, எத்தனை பெரிய ஏமாற்றம்! கொஞ்சமா, நஞ்சமா! எத்தனையோ நாட்களாகக் குன்றாத ஆர்வத்துடன் தனக்குள்ளேயே வளர்த்துக் கொண்டு விட்ட ஆசை பொடிப் பொடியாத் தகர்ந்து போய் விட்டதே ! அவனுக்கு உலகமே இருண்டு விட்டதுபோல் தோன்றியது. செல்வம் வாசலுக்குப் போனவன் நிராசையுடன் அந்த ஜன்னல் கதவைத் திரும்பிப் பார்த்தான். அது இனி என்றுமே கூடத் திறந்திருக்கலாம். ஆனால் அவனுடைய அபிலாஷைகள் அங்கே நிரந்தரமாக மூடிக் கொண்டு விட்டன.

# வட்டமேஜை

**செ**ன்ற 19-1-69 இதழ் 'கல்கி'யின் கடைசிப் பக்கத்தில் ஓவியர் மணியம் நிதிக்குப் பணம் கொடுத்தவர்கள் பெயர்களைப் பிரசுரித்திருந்தீர்கள். மிக்க நன்றி. ரூபாய் ஐந்து கொடுத்தவர்கள் ஜாபிதாவில் ப. க. வைத்தியநாதன் தூத்துக்குடி என்று பிரசுரித்திருக்கிறீர்கள். என்னுடைய இனிஷியல் ''ப. சு.''; ''ப. க.'' அல்ல.

மேலும் நான் புதுக் கிராம இளைஞர் சங்கத்தின் காரியதரிசி என்ற முறையில் தான் பணம் அனுப்பினேன். என்னுடைய சொந்த முறையில் அல்ல.

தூத்துக்குடி-3 சங்கத்தின் சார்பாக
29-1-69 ப. சு. வைத்தியநாதன்

**செ**ன்ற 2-2-69 இதழில் மேலைச் சிவபுரி அன்பர் சேலம் - பெங்களூர் இருப்புப் பாதையை மீட்டர்கேஜாகப் போட்டதற்குக் குறை கூறியிருக்கிறார். ஆனால் ரயில்வே நிர்வாகத்தினர் யோசனை செய்தே அந்த லயனை மீட்டர் கேஜாகப் போட்டிருக்கிறார்கள். இப்போது போட்ட லைன் பெங்களூர் - சேலம் - விருத்தாசலம் - கடலூர் - இணைக்கும் ஒரு மீட்டர்கேஜ் வழியாகும். பழுப்பு நிலக்கரிச் சுரங்கமான நெய்வேலியும் இந்தப் பாதையில் இருப்பது குறிப்பிடத்தக்கது.

மேலும் குறைகூறிய அன்பர் சேலத்தில் மீட்டர் கேஜ் லைன் இல்லை என்கிறார். சேலம் - விருத்தாசலம் மீட்டர் கேஜ் பாதை தானே ?

சென்னை - 20
31-1-69 வி. ஆர். தியாகராஜன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathar Publications Private Limited at Kalki Press, Chetput Madras-31
Managing Editor T Sadasivam

இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப் படுத்தும்—இதர நோய்கள் பாதிக்கவும் இடமளிக்கும்.

# வாடர்பரீஸ் காம்பவுண்ட் அருந்தி ஆரோக்கியமாகவும் சக்தியுடனும் திகழுங்கள்

இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைப்பதால், இதர நோய்கள் உங்களைப்பாதிக்கக்கூடும். எனவே தவறாது வாடர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வாருங்கள். பசியைத் தூண்டி, இழந்த சக்தியை மீட்டு, உடலுக்கு நோய்த்தடுப்புச்சக்தியை அளிக்கும் ஊட்டப்பொருள்கள் அடங்கியது வாடர்பரீஸ் காம்பவுண்ட். அதிலுள்ள க்ரியோஸாட் மற்றும் க்வயாகால் இருமலிலிருந்தும் ஜலதோஷத்திலிருந்தும் நிவாரணம் அளிக்கின்றன.

**வாடர்பரீஸ் காம்பவுண்ட்—மிகவும் நம்பகமான டானிக்**




வார்னர்-ஹிந்துஸ்தான் லிமிடெட்

WH 8075 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon